219

உ

சிவமயம்

# காவேரிப்புராணம்





திருவிடைமருதூர்

ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்

## பட விளக்கம்

காவிரியின்நடுவில் இடபதேவர் வீற்றிருப்பதால் இது இடபதீர்த்த மெனப்படும். இங்கு ஐப்பசி மாதம் முழுதும் நீராடுதல் பலனளிக்கும். கங்கை முதலிய புண்ணிய நதிகளும் இங்குவந்து கலந்து புனிதத்தன்மை எய்துகின்றன. கடைமுழுக்கன்று ஸ்ரீ மாயூரநாதர் கருணைப்பெருக்கு அன்பர்களை ஆட்கொள்கிறது. அப் பேரின்ப வெள்ளத்திலே திளைக்க நீரின்ப வெள்ளத்தில் நீந்திக் குளிக் கின்றார்கள் பல்லாயிர மக்கள்.

வெளியீடு எண் 28.

உ

சிவமயம்

# காவேரிப்புராணம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து

இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்

தைப்பூசத் திருநாள் வெளியீடு

4—2—1966



ஸ்ரீ மகாலிங்கப்பெருமான்

உ

சிவமயம்

# முன்னுரை

---

நமது நாட்டில் புண்ணிய நதிகளாகக் கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, கிருஷ்ணு, சிந்து, காவிரி ஆகிய ஏழு நதிகளையுமே வேதாகமங்களில் குறிப்பிட்டுக் கூறியுள்ளார்கள். இவ்வேழனுள்ளும் வடக்கே கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மூன்றையும் சிறந்ததாகவும், தெற்கே காவிரி சிறந்ததாகவும் மக்களால் பாராட்டிக் கொண்டாடப்படுகிறது. இந்நதிகளின் சிறப்புக்களைப் புராணங்கள் இதிகாசங்கள் ஆகியவை விரிவாக விளக்கிக்கூறிப் பாராட்டுகின்றன.

காவிரிநதியின் பெருமையையும், சிறப்பையும் கூறும் புராணங்களின் சிறப்பை ஒவ்வொன்ருக வெளியிடவேண்டியது மிகமிக இன்றியமையாதது. அவ்வகையில் காவிரியின் சிறப்பைக் கூறும் புராணங்கள் மூன்றனுள் பிரமகைவர்த்த புராணமும் ஒன்று. இந்தப் புராணத்தைச் செய்யுள்வடிவில் திருமறைக்காடு திருச்சிற்றம்பலமுனிவர் ஆக்கியுள்ளார். இதில் முப்பத்தாறு அத்தியாயங்கள் காணப்படுகின்றன. பாடல்கள் 1474.

ஒவ்வோர் அத்தியாயத்திலும் மாயூரதலத்தின் பெருமை, காவிரியாற்றிலுள்ள துலாகட்டமாகிய இடபகட்டத்தின் பெருமை, அவ்விடத்தில் ஐப்பசி

மாதத்தில் நீராடுவதால் மக்கள் அடையும் பயன் யாவும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

இப்புராணம் முழுவதும் படித்தால் காவிரியை ஒரு தெய்வ உருவாகவேகொண்டு வணங்கிவந்த சிறப்பை அறியலாம். இந்நதி மக்களைத் தாயைப் போலப் பேணுகின்றது. தந்தையைப் போன்று கருணைகாட்டுகிறது. உள்ளும்புறம்பும் மக்களிடை குடிகொண்டிருக்கும் அழுக்குக்களைப் போக்கிப் புறத்தூய்மையும் அகத்தூய்மையும் அடையுமாறு செய்கின்றது. அல்லாமல் காவிரிபாயும் நாடே நல்லநாடு என்று எண்ணுமாறு இந்நதி எல்லா வளங்களையும்பெற்று விளங்குகிறது.

காவிரிநதி சய்யமலையில் உற்பத்தியாகிறது. மைசூர்வழியாகவந்து சோழநாட்டில் எல்லாவளங் களையும் அளித்துத் தன் கணவனாகிய கடலிடைச் சேர்கிறது. இது எங்கு சென்றாலும் அங்கெல்லாம் பல புண்ணிய தலங்களைப் பெற்றுப் பொலிவுடன் விளங்குகிறது. மேலும் காவிரி புகுந்து ஆடுவோர் நல்ல அறிவு பண்பாடு முதலிய யாவும் வாய்க்கப் பெற்றவர்களாகத் திகழ்கிறார்கள்.

காவிரியில் புராணங்களில் கூறியுள்ள நியமம் தவறாது ஒருவர் நீராடின் அவர்களைப் பற்றியுள்ள பாவங்கள் அனைத்தும் பஞ்செனப் பறந்துபோம். முன் பிறவியில் செய்த பழவினைகளும் விலகும். நன்மை பெருகும். அறிவு விளக்கமடையும்.

இத்தகைய பல சிறப்புக்களுடைய காவிரியின் புராணவரலாறுகளை எளிய உரைநடையில் எழுதி

வெளியிட வேண்டும் என்று திருவாவடுதுறை ஆதீனத்து 21-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாணையிட்டார்கள். அவ்வருளாணையை அடியேன் சிரமேற்கொண்டு காவேரிப்புராணங்களில் ஒன்றாகிய பிரமகைவர்த்த புராணத்தை உரை நடையாக ஆக்கியுள்ளேன். இவ்வுரை நடை நூல் திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி கோயில் தைப்பூசப் பெருவிழாவில் பூசவிழாவன்று வெளி வருகின்றது. இதிற்குறையுளதேல் அறிஞருலகம் பொறுத்தருளுக.

மாயூர நகரைச் சார்வோர் வல்வினை தானே மாயும்
மாயூரத் துலைநீ ராட மாய்விலா வாழ்வு நல்கும்
மாயூர வடிவ மான மங்கையோர் பங்க ரான்
மாயூர நாதன் றளை வழுத்துவோ ரமர ராவார்.

இங்ஙனம்,

திருவிடைமருதூர்,
2—2—66.

பொன். சுப்பிரமணியபிள்ளை,
தலைமைத்தமிழாசிரியர்,
திருவாவடுதுறை ஆதீன உயர்நிலைப்பள்ளி.

௨

வாசங்கமழ் மாமலர்ச் சோலையில் வண்டே
தேசம்புகுந் தீண்டியோர் செம்மை யுடைத்தாய்ப்
பூசம்புகுந் தாடிப் பொலிந்தழ காய
ஈசன்உறை கின்ற இடைமரு தீதோ.

தேக்குந்திமி லும்பல வுஞ்சுமந் துந்திப்
போக்கிப்புறம் பூச லடிப்ப வருமால்
ஆர்க்குந்திரைக் காவிரிக் கோலக் கரைமேல்
ஏற்கஇருந் தான்றன் இடைமரு தீதோ.

— திருஞானசம்பந்தர்.



மர்க்கரா
கிருஷ்ணராஜ சாகரம்
ஸ்ரீரங்கப்பட்டினம்
சென்னை
குடகு
மைசூர்
சிவசமுத்திர நீர் வீழ்ச்சி
மேட்டூர் அணை
சேலம்
பவானி
கடலூர்
திருவையாறு
காவேரிப்பூம் பட்டினம்
ஸ்ரீரங்கம்
மாயூரம்
திருவாவடுதுறை
கோயமுத்தூர்
திருச்சி
கல்லணை
திருவிடைமருதூர்
வங்காள விரிகுடாக் கடல்
அரபிக் கடல்
மதுரை
இராமேஸ்வரம்
திருவனந்தபுரம்
கன்னியாகுமரி
இலங்கை

# காவேரி

காவேரி என்பது ஒரு தெய்வப்பிறவி. இச்சொல் கா என்பதால் பாபநீக்கத்தையும், வே என்பதால் விரும்பியதைக் கொடுப்பதையும், ரி என்பதால் முத்திப்பேற்றையும் அருளுவது என்னும் இம்மூன்று பொருள்களையும் தருவதைக்காணலாம். கவேரமுனிவருக்குப் புதல்வியாகத் தோன்றி வளர்ந்தமையால் காவேரி என்னும் பெயரினைப் பெற்ருள்.

காவேரி குடகுநாட்டைச் சார்ந்த சய்யமலையில் உற்பத்தியாகிறது. காவேரி உற்பத்தியாகிற இடத்தைத் 'தலைக்காவேரி' என்று அழைக்கின்ருர்கள். ஆனால், காவேரி தலைக்காவேரிக்குமேல் உள்ள பிரமகிரி என்ற இடத்தில்தான் உற்பத்தியாகிறது. சய்யமலையின் ஏனைய பக்கங்களிலிருந்து பவானி, கபிலை முதலிய ஆறுகள் உற்பத்தியாகி வருகின்றன.

தலைக்காவேரி அருகில் ஒரு நெல்லிமரம் உளது. அதனைத் திருமால் உருவம் என்று புராணங்கள் கூறுகின்றன. அந்நெல்லிமரத்தின் அடியிலிருந்து தோன்றுவதால் இது சிறப்புடையதாகும். அதன் பின்னர், காவேரி பாகமண்டலம் என்னுமிடத்தில் இரு கிளை ஆறுக்ள் கலக்கப்பட்டுப் பெருக்கெடுத்து ஓடுகின்றது. பாகமண்டலத்திற்கும் குடகுத்தலைநகரான மர்க்காராவுக்கும் இடையே இருப,த்துநான்கு மைல்களுள்ளன. இவ்விடத்திற்குப் போக மோட்டார் வாகன வசதி உண்டு.

இத்தலைக்காவேரியில் ஐப்பசிமாதத்தில் ஏனைய எல்லா நதிகளும் வந்து கலப்பதாகப் புராணம் கூறுகிறது. முனிவர்கள் முதலியோர் ஐப்பசிமாதத்தில் இங்கு நீராடிப் பேறுபெற்றுள்ளார்கள்.

தலைக்காவேரி குடகுநாட்டின் நடுவில் உள்ளது. இவ்விடம் நெல்லிமரங்கள், சந்தனமரங்கள் நிறைந்து உள்ளன. செடிகளும் கொடிகளும் அங்கு நிறைந்து இயற்கை எழில் மிக்குக் காணப்படும். அவ்விடத்தில் ஒரு சிறு கிணறுபோன்ற பள்ளம் காணப்படுகிறது. அந்தப் பள்ளத்துள் இடைவிடாது நெல்லிமரத்தின் அடியில் ஊறும் தண்ணீர் விழுந்துகொண்டேயிருக்கிறது. அடிக்கடி அப்பள்ளத்துள் விழும் தண்ணீர் வழிந்து சரிவான வழியாக வேறு ஒரு பெரிதான பள்ளத்தில் வந்து சேருகிறது. அங்கிருந்து சரிவான பாறைகளின் இடையே ஓடிப் பாகமண்டலம் என்ற இடத்தை அடைகிறது.

பாகமண்டலத்தில் கனகாறும், சுத்தசோதி ஆறும் வந்துசேருவதால் அவ்விடத்தைத் திரிவேணி சங்கமம் என்கிறார்கள். இந்த இடத்திலிருந்து தலைக்காவேரி நான்குமைல். தலைக்காவேரியில் நீராடுவோர் அங்குள்ள நெல்லிமரம், அகத்தியர் ஆலயம் இவைகளை வழிபட்டுப் பின்பு பாகமண்டலம வருவார்கள். இங்கு ஐப்பசிமாதம், சிவராத்திரி, மகோதயம் ஆகிய புண்ணிய காலங்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அந்நாட்களில் யாத்திரையாக வருபவர்கள் காவேரியில் நீராடிப் பிதுரர் காரியங்களைச் செய்கிறார்கள். பிண்டமிட்டுத் தானமும் கொடுக்கிறார்கள். இங்கு எல்லாவிதமான சௌகர்யங்களும் மக்கட்குக் கிடைக்கிறது.

சய்யமலை மிக உயரத்தில் இருப்பதால் அங்கு எப்பொழுதும் மழை பெய்துகொண்டே இருக்கிறது. அம்மலையின் பள்ளத்தாக்குகளில் மரங்கள், செடிகள், கொடிகள் அடர்ந்து செழித்துக் கண்ணைக் கவரும் வகையில் காட்சிகொடுத்துக்கொண்டிருக்கும். அங்கு உள்ள காடுகளில் யானை, புலி, சிறுத்தை போன்ற கொடிய விலங்குகள் காணப்படுகின்றன.

சய்யமலையை அடுத்துள்ள பாகமண்டலத்துக்குக் கள்ளிக்கோட்டை, தலைச்சேரி, மைசூர், மங்களூர் ஆகிய இடங்களிலிருந்து மோட்டார்கள் போகின்றன. இடையில் விராசபேட்டை என்ற ஊர் சந்திக்கிறது.

ஐப்பசி மாதத்தில் இங்கு வந்து நீராடுவதால் நீராடுபவர் இறைவன் அருளால் எல்லாப் பாபங்களும் நீங்கப்பெற்று, மனம் புத்தி இவைகள் தூய்மை அடையப்பெற்றுச் சிறப்படைவார்கள். காவேரி முதலில் இரண்டு கிளைகளாகவும், பின்பு மூன்று நான்கு கிளைகளாகவும் பிரிந்து ஓடுகின்றது.

## காவேரியின் வரலாறு

கவேரர் என்ற முனிவர் ஒருவர் இருந்தார். அவர் முனிவர்களுள் மேம்பட்டவர். இமயமலையில் ஒரு பக்கத்தில் கடுந்தவஞ்செய்தார். அவருடைய தவத்தினை எண்ணிப் பிரமா வெளிப்பட்டார். அவர் கவேரரை நீ விரும்பிய முத்தியைத் திருமாலே அளிக்கவல்லவர் ஆவர்; திருமாலினருளால் விஷ்ணுமாயா என்பவள் உனக்குப் பெண்ணாகத் தோன்றுவாள்; அவளால் நீ வீடுபேறு அடைவாய் என்று கூறி மறைந்தார்.

பிரமன் கூறியவாறு லோபாமுத்திரை என்னும் பெயருடன் விஷ்ணுமாயா தோன்றித்தவம்செய்தாள். திருமால்தோன்றி அவளுக்குப் பின்வருமாறு அருள் செய்தார். பெண்ணே! நீ விரும்பியபடி புண்ணியநதியாகப் பெருக்கெடுத்து ஓடலாம்; நான் சய்யமலையில் நெல்லிமரமாகத் தோன்றுவேன்; என்னைப் பிரமன் விரசை நதியின் நீரையெடுத்துச் சங்கினால் ஆட்டுவான்; நீ அப்புண்ணிய நீருடன் கலந்து கங்கையென்னும் பெயரினைப் பெற்றுத் தென்னாட்டை அடைக என்று கூறியருளினார்.

தென்னாட்டை அடைந்ததும் உன்னைக்கண்டு வழிபட்டவர்கள் புண்ணிய உலகத்தை அடைவார்கள். மக்கள் செய்யும் பாவங்கள் அனைத்தும் உன்னால் நீங்கிவிடும். உலகில் கங்கையைக் காட்டிலும் மேலான சிறப்பை உனக்கு அளிக்கிறேன். எல்லாப் புண்ணிய நதிகளும் உன்னையே கொண்டாடும். என்னுடைய திருவடித் தொடர்பால் நீ பரிசுத்தமடைந்துள்ளாய். மேலும் சிரங்கத்தில் உன்மடியில் நித்திரை செய்யப் போகிறேன். நான் உன்னுடைய முடியிலும் மடியிலும் இருப்பதால் நீயே கங்கையைவிட மேலான புண்ணியத்தைக் கொடுக்கும் நதியாவாய். கங்கை முதலிய புண்ணிய நதிகளில் பலயுகங்கள் நீராடி அடையும் புண்ணியத்தை நீ தோன்றும் நெல்லிமரத்தடியில் ஒருமுறை ஆடுவதாலே மக்கள் பெற்றுவிடுவார்கள். நீ அகத்தியருக்கு லோபாமுத்திரை என்ற பெயருடன் மனைவியுமாவாய் என்று திருமால் கூறி மறைந்தார்.

திருமால் கூறியருளியவாறு அகத்தியமுனிவர் காவேரி அன்னையை அணுகினார். காவேரி நான் கேட்கின்ற வரத்தை அளித்தால் நான் லோபாமுத்திரை

என்னும் பெயருடன் உங்களை மணந்துகொள்ளுகி றேன் என்று கூறினுள். முனிவரே! நான் உலகத் தைக் காக்கும்பொருட்டு, காவிரியென்னும்பெயருடன் நதியாகித் தென்னுட்டிற்குச் செல்வேன். பதினுன்கு உலகங்களிலுமுள்ள புண்ணிய நதிகள் யாவும் நதி யுருவுடன் என்னைவந்து அடையவேண்டும். நான் ஓடும் கரையின் இருமருங்கிலுமுள்ள நாடு நகரம் யாவும் உண்மையுடன் மிகச்செழிப்பும் உடையதாக விளங்கவேண்டும். மக்களனைவரும் செல்வம் முதலிய பொருள்களைப்பெற்றுச் சிறப்புற்று வாழவேண்டும். என்னை ஒருவர் வழிபட்டாலும், அல்லது எனது நீரை ஒருவர் உண்டாலும், காவிரி என்று ஒருமுறை என்பெயரைச் சொன்னுலும் அவர்கள் என்ன பாபங் கள் செய்திருந்தாலும் நீங்கப்பெற்று விடுபேறடைய வேண்டும் என்று கூறினுள். அகத்திய முனிவரும் அவ்வாறே ஆகுக என்று வரங்கொடுத்தருளினுர்.

காவேரி நதியாகமாறிக் கங்கை முதலிய நதிகள் அடங்கிய கமண்டலத்திடைப் புகுந்தாள். அகத்தியர் கமண்டலத்துடன் சய்யமலையை அடைந்தார். அங் கிருந்து காவேரி நதிவடிவாகப் பூமியில் புகுந்தாள். பின்னர் அகத்தியமுனிவரிடம் லோபாமுத்திரையாகி அவரை மணந்தாள். முடிவில் கடலாகிய அரசனை மணந்து சிறப்புற்ருள்.

இதனுல் பொன்னி யென்னும் சிறப்பினையுடைய காவேரி தெய்வக்காவேரி என்னும் சிறப்பைப்பெறு கின்ருள். அவள் என்றும் வழிபடக் கூடிய பெருமை யுடையவளாவள். அதனுல் நாமும் காவிரியன்னையை நாளும் வழிபட்டு உய்வோமாக.

காவேரி மக்களுக்கு அகத்தியர் அருள்பெற்று அருட்செல்வத்தை வழங்குதல் போலவே பொருட் செல்வத்தையும் கொடுக்கின்ருள். காவேரியின் இரு மருங்கும் வளமார் சோலைகளும், என்ணெய்வளங்களும் காணக்கிடக்கின்றன. அன்றியும் காவேரியின் இடையே சிவசமுத்திரம் மேட்டூர் ஆகிய இடங்களில் மின்சார உற்பத்திசெய்து நாட்டுக்கு வழங்கப்படுகின்றது. இம்மின்சாரத்தால் நம்மாநிலத்தில் பலவித தொழில்கள் தொடங்கி நடைபெறுகின்றன.

அன்றியும் காவேரிநதிபாயும் வளநாட்டில்தான் பலவிதமான கலைகளும் பண்டுமுதல் வளர்க்கப்பட்டு வந்துள்ளன. கலைகளில் வல்ல அறிவாளர்கள் பலர் இங்குதான் தோன்றினர்கள். காவேரியின் இருகரைகளிலும் சிவ விஷ்ணு ஆலயங்கள் பல நிறைந்துள்ளன. அவ்வாலயங்கள் யாவும் வரலாற்றுச் சிறப்பு உடையவை ஆகும். ஆலயங்களேயன்றி அருட்செல்வங்களை வளர்க்கும் ஆதீனங்களும் காவேரிக்கரையில் இருக்கின்றன.

## நீராடும் முறைமை

காவிரியில் நீராடுவோர் முன்னோர்கள் புராணங்களில் கூறியுள்ள முறைகளைப் பின்பற்றியே நீராட வேண்டும். அம்முறைப்படி நீராடினல் நீராடுவோரின் பழவினைகள் பஞ்செனப் பறந்துபோகும். உடலைப் பற்றிய பிணி முதலியனவும் நீங்கும். பழம் பிறவிகளிற் செய்த பழவினைகளும் அகலும். அவ்வாறு வினை நீங்கப்பெற்ற ஆன்மா என்றும் புத்தொளிபெற்று விளங்கும். மனம் நன்னிலை பெறும். அறிவு தெளிவு அடையும். நல்லவர் கூட்டம் நம்மை வந்தடையும்.

இத்தகைய காவிரிநதியின் பரிசுத்த தெய்வத்தன்மையை உணர்ந்து அறிந்தோ அறியாமலோ ஆற்றிடையே அசுத்தங்களைச் செய்தல்கூடாது. ‘நல்லது செய்தல் ஆற்றிராயினும், அல்லது செய்தல் ஓம்புமின்’ என்றவாறு ஆற்றின் தூய்மையைக் கெடுப்பவரை நல்வழியில் திருத்த முற்படவேண்டும். இந்தச் செயல் எல்லா மக்கட்கும் பொதுவான ஒன்று.

முன்னோர்கள் மக்களாகிய நாம் உய்திபெறுதற்கு மூன்று வழிகளை வகுத்துள்ளார்கள். அவைகள் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பனவாம். இம்மூன்றன் சிறப்பையும் நாம் உள்ளவாறு உணர, நாம் உண்ணும் உணவில் ஒரு நியதியைக் கடைப்பிடிக்கவேண்டும். இவைகளைக் கடைப்பிடிக்க நமக்கு நல்ல மன உறுதி வேண்டும்.

காவிரியில் நீராடுவதற்கு முன்பு ஒன்றுபட்ட மனத்துடன் இறைவனை மனத்துள் வழிபடவேண்டும். மனத்தில் காவிரியைக் குறித்துத் தியானஞ் செய்யவேண்டும். பல தீய எண்ணங்களையும், மனத்துயரையும் அகற்றவேண்டும். மனத்தில் முழு அன்பு உடையராய்ப் பத்தியுடன் நீராடவேண்டும். நீராடும் பொழுது திருவைந்தெழுத்தைக் கூறிக்கொண்டே நீராடவேண்டும்.

புனிதப்பொன்னியில் நீராடுமுன்பு எண்ணெய் பூசிக்கொள்ளுதல் கூடாது. வெற்றிலைபோட்டுத் துப்புதல், மயிர் கழித்தல் முதலியன கூடாது. நெறி வழுவிய பேச்சுங்கூடாது. நீராடிய பின்பு அவரவர்கட்கு உரிய வழக்கப்படி திருநீறு அணிந்துகொள்ள வேண்டும். ஜபம் முதலியன செய்தல்வேண்டும்.

காவிரியில் நீராடியபின்பு தக்கவர்களைக்கொண்டு காவிரிபுராணம் சொல்லச்செய்து கேட்கவேண்டும். புராணம் கேட்டபின்னர், தலத்திலுள்ள இறைவனை முறைப்படி வழிபடவேண்டும். காவிரியின் இருமருங்கிலும் தென்னாடுடைய சிவன் உறைகின்றார். அந்த இடங்களுக்குச் சென்றால், அங்குள்ள நீர்த்தக்கரையைக் கண்டவுடன் வணங்கவேண்டும். தண்ணீரில் கால்படாமல் கரையில் நின்று தண்ணீரைக் கையில் ஏந்தித் தலையில் தெளித்துக்கொள்ளல் வேண்டும். இவ்வாறு முறையாக நாம் காவிரிநீராடினால் எல்லா நலங்களும் பெற்று இம்மையிலும் அம்மையிலும் சிறப்புற வாழ்வோம்.

சிறப்பு: காவிரி தான் தோன்றிய சய்யமலையை விட்டுக் கிழக்குநோக்கிக் கடலாகிய தன் கணவன் இல்லினைத்தேடி ஓடுகின்றது. அவ்வாறு வருகின்ற காவிரி முன்னர் மைசூர் மாநிலத்தை அடைகின்றது. அங்கு காவிரியன்னை கிருஷ்ணராசசாகரம் என்னும் இடத்தில் தேங்கிநின்று, அம்மாநிலத்துக்குப் பெரும் வளப்பத்தை அளிக்கிறது. அந்த அணைக்கட்டை அடுத்துள்ள பிருந்தாவனம் கண்டு களிக்கவேண்டிய ஒன்று. அதிலுள்ள செடிகள் வண்ணவண்ண மலர்கள் பலவண்ண மின்விளக்குகள் ஆகிய யாவும் காண்போர் கண்ணையும் கருத்தையும் கவர்வன. பிருந்தாவனத்தில் காவிரியம்மன் சிலையும் வைக்கப்பட்டுளது.

மைசூர் மாநிலத்தை விடுத்துச் சேலம் வழியாக வரும் காவிரி திரிசிரபுரத்தை அடைந்ததும் அகண்ட வடிவில் பரந்து அகண்ட காவிரி என்னும் பெயரினைப் பெறுகிறது. அம்மாநிலம் அடையும் வளம் அளவிட



திருச்சியில் காவிரி



காவிரி கடலொடு கலத்தல்

முடியாதது. அதன் பின்னர் கல்லணைகடந்து காவிரி தஞ்சாவூர் மாவட்டத்தை அடைகிறது. தஞ்சையில் செந்நெல்லும், கரும்பும், இஞ்சியும், மஞ்சளும், வாழையும், கமுகும், தெங்கும் எங்கும் நிறைந்து காணப்படுகின்றன. காவிரியின் முழுவளமும் தஞ்சைமாநிலமே பெறுகின்றது என்றால் அது மிகையாகாது.

இத்தகைய வளத்தைத் தரும் காவிரி கிழக்கே செல்லச்செல்ல மிக ஒடுங்கிய நிலையில் சிறு வாய்க்காலாகக் காணப்படுகின்றது. இந்நிலையில் காவிரிப்பூம் பட்டினத்தில் அன்னை காவிரி கடலுடன் கலக்கிறாள். தற்காலம் காவிரி கடலொடு கலக்கும் இடம் மணல் மேடிட்டுக் காணப்படுகின்றது. அதனை அகற்றினால் பண்டுபோல் காவிரி மிகப் பரந்தநிலையில் கடலொடு கலப்பதைக் கண்டு களிக்கலாம். ஆடிமாத, தைமாத அமாவாசைகளில் பல ஆயிரக்கணக்கான மக்கள் கடலாடிக் காவிரியாடிச் செல்வதை இன்றும் காணலாம். காவிரிப்பூம்பட்டினம் செல்ல மாயூரத்திலிருந்து பஸ் வசதியுண்டு.

காவிரியாறு எத்தனையோ அரச பரம்பரையினரால் வழி வழியாகப் பராமரிக்கப்பட்டு வந்துள்ளது. அவ்வரசருள் சிறந்த கரிகாலன் காவிரி கரைகண்ட சோழன் என்று அழைக்கப்பட்டான். எவ்வளவோ அரசர்களையும், அரசு வேறுபாடுகளையும் கண்டு விளங்கும் ஒன்று காவிரி. எது எவ்வாறாயினும் காவிரி நாகரிகம் கவின்பெறு நாகரிகம் என்று இன்றும் மக்கள் பாராட்டுகின்ற நிலையில் பெருமையும் புகழும் பெற்று விளங்குகிறது.

காவிரிநதியில் எந்த இடத்தில் நீராடினாலும் மக்கள் இறைவனையும், அவனுக்கு உரிய திருவைந் தெழுத்தையும் மனத்துள் இருத்தி நீராடவேண்டும். பின்னர், காவிரிக்கரையில் அமர்ந்து பூசைசெய்தல் வேண்டும். இவ்வாறு பூசைசெய்பவர்கள் பழவினையி னின்று விடுபட்டு உலக ஆசையையும் விட்டொழிப் பார்கள் என்று வேதங்கள், புராணங்கள், இதிகாசங் கள், தோத்திரங்கள் யாவும் எடுத்துரைக்கின்றன. ஆசிரியர் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் காவிரி யைப் பலபடப் பாராட்டியுள்ளார்.

"மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ வாடை யதுபோர்த்திக்
கருங்க டற்கண் விழிதொல்கி
நடந்தாய் வாழி காவேரி.

பூவார் சோலை மயிலாலப்
புரிந்து குயில்க ளிசைபாடக்
காமர் மாலை அருகசைய
நடந்தாய் வாழி காவேரி.

வாழி எந்தன் வளநாடு
மகவாய் வளர்க்குந் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி
ஒழிவாய் வாழி காவேரி."

'காவிரி புரக்கும் நாடு கிழவோன்' என்று சோழ மன்னன் ஒருவன் பாராட்டப்படுகின்றான். நாமும் என்றும் காவிரி எழில்மிகு கன்னியாய் நானிலவளங் களை நயனுற அளித்து, நம் நாட்டிடை வாழ்வாளாக என்று வந்தித்து வாழ்த்துவோமாக!

## திரு ஆனைக்கா

இத்தலம் காவிரிநதிக்கு வடக்கே ஒருமைல் தூரத்திலுள்ளது. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்து பூதத்தலங்களுள் அப்புத் தலம். இறைவன் உறையும் கருவறையில் எப்பொழுதும் தண்ணீர் ஊறிக்கொண்டேயிருக்கும். இறைவர் நாவல்மரத்தடியில் உறைவதால் ஜம்புகேசுரர் என்ற திருப்பெயருடையார். இறைவி அகிலாண்டேசுவரி. இங்கு இறைவனைச் சிலந்தியும் யானையும் வழிபட்டுப் பேறுபெற்றதாகப் புராண வரலாறு கூறுகின்றது. சிலந்தி இறைவன்மீது கதிரவன் ஒளிபடாமல் கூடு கட்டும். யானை காவிரிநீரைக் கொண்டுவந்து நீராட்டும். அதனால் கூடு கலைந்துவிடும். இதனைக் கண்ணுற்ற சிலந்தி யானையின் துதிக்கையினுள் புகுந்து கடித்தது. யானையும் சிலந்தியும் மடிந்தது. சிலந்தியே கோச்செங்கட் சோழனாகப் பின்னால் பிறந்தது என்பது வரலாறு. சோழன் இறைவனுக்கு யானைபுகாத மாடக்கோயில் ஐம்பத்துநான்கு கட்டினான்.

இந்தக் கோயில் ஐந்து திருச்சுற்றுக்களையுடையது. அகிலாண்டேஸ்வரி கோயில் இரண்டு பிரகாரங்களையுடையது. இப்பிரகாரங்களுள் விபூதிப் பிரகாரம் மிகச் சிறப்புடையது. இந்தப் பிரகாரத்தை இரண்டு நாள் முறையாக வலம்வருவோர் நினைத்த செயல்களை நினைத்தவண்ணம் அடைவார்கள்.

இங்கே தீர்த்தமாக விளங்கும் காவிரி அகண்ட காவிரி என்று அழைக்கப்படுகிறது. மக்கள் பெரும்பாலும் அம்மா மண்டபம் காவிரிப் படித்துறையில்

நீராடுகிறார்கள். கோவிலுக்குள் ஒன்பது தீர்த்தங்கள் உள்ளன. அவற்றிலும் நீராடவேண்டும்.

கோயில் முதற்பிரகாரத்தில் சந்திரன், சூரியன், சரசுவதி, துர்க்கை, சண்டிகேஸ்வரர் உருவங்களைக் காணலாம். இரண்டாம் பிரகாரத்தில் மண்டபமும், வல்லபகணபதி ஆலயமும் காணவேண்டியவை. மூன்றும் பிரகாரத்தில் விசாலாட்சி விசுவநாதர் ஆலயம் சிறியதாகக் காணப்படுகின்றன. நான்காம் பிரகாரத்தில் வீடுகள் நிறைந்துள்ளன. இந்தப் பிரகாரத்தில் எட்டுப் பிள்ளையார் கோயில்கள் உள்ளன. இக்கோயிலின் பெரியகோபுரம் விபூதியே கூலியாகக் கொடுக்கப்பட்டுக் கட்டப்பட்டதாகும். அகிலாண்டேசுவரியின் மேல் திருவாவடுதுறை மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் பதிகம் பாடியுள்ளார். காளமேகப்புலவரால் பாடப்பட்ட திருவானைக்கா உலாவும் உள்ளது.

காவிரி திரிசிரபுரத்தில் என்றும் வற்றாதநிலையில் ‘தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே, மண்ணாவதுஞ்சோழ மண்டலமே’ என னும் ஔவை வாக்கிற்கேற்பவும், ‘வான் பொய்ப்பினும் தான் பொய்யா மலைத்தலைய தலைக்காவிரி’ என்பதற்கேற்பவும் இன்றும் விளங்கிக்கொண்டிருக்கின்றது.

## திருக்குடந்தை

இத்தலம் காவிரியின் தென்கரையில் உள்ளது. வடக்கே அரிசொல்லாறு ஓடுகின்றது. கோயில் நகரின் நடுநாயகமாக அமைந்துளது. இத்தலத்தைச் சுற்றி ஸ்ரீ நாகேசுரர்கோயில், ஸ்ரீ சோமேசுரர்கோயில்

முதலிய சிவாலயங்கள் இருக்கின்றன. கும்பேசுரரை வழிபடுவதற்கு முன்பு திருவிடைமருதூர், திருநாகேசுரம், தாராசுரம், சுவாமிமலை, திருப்பாடல்வனம் ஆகிய ஐந்து தலங்களை வழிபடவேண்டும். இங்கு வழிபடுவோர் காவிரியில் சக்கரப்படித்துறை, பகவத் படித்துறை ஆகிய இடங்களில் நீராடி, மகாமகக்குளத்திலும் நீராடவேண்டும். பன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை குரு சிம்மராசியில் வரும்பொழுது இங்கு மகாமகத் திருவிழா நடைபெறுகின்றது. அவ்வமயம் எல்லாப் புண்ணியதீர்த்தங்களும் இங்குவந்து ஒன்று சேர்கின்றன. மூவர் திருப்பாடலும் இத்தலத்துக்கு உண்டு. இச்சிறப்பை,

"ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
இப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவிஅம ருலகனைத்து முருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலுந்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே"

என்று திருநாவுக்கரசர் கூறுகிறார்.

## திருவிடைமருதூர்

இத்தலம் காவேரித் தென்கரையில் ஒருமைலில் உள்ளது. இத்தலத்தில் மூகாம்பிகை தவமிருந்து பேறுபெற்றாள். அம்பாளுக்கு தனிச்சந்நிதியுள்ளது. மூவர் பாடலும் பெற்றதலம். இத்தலத்தில் நிகழும்

தைப்பூசவிழா ஒரு தனிச்சிறப்புடையது. காவிரியில் நீராடுமிடம் மிக்க சிறப்பினைக் கொடுப்பது.

தைப்பூசவிழாவில் கொடியேறியது முதல் பத்து நாட்களிலும் தலத்திலுள்ள தீர்த்தங்களிலெல்லாம முன்னர் நீராடி இறுதியில் காவிரி நீராடவேண்டும். பின்னர் ஆலயத்தை அடைந்து இறைவரையும் இறைவியையும் வழிபடவேண்டும். திருவிழா நடைபெறும் பத்து நாட்களிலும் உபவாசமிருப்பது நல்லது. பூசநாளன்று காவிரியில் இறைவர் இடபாரூடராகக் காட்சி கொடுத்தருளுவார். நாரதர் பூசநாளில் முறைப்படி எல்லாத்தீர்த்தங்களுமாடிப் பின் காவிரியாடி இறைவனை வழிபட்டுச் சென்றதாகப் புராணம் கூறுகின்றது. இத்தலம் திருவாவடுதுறை ஆதினத்துக்குச் சொந்தமானது. திருஞானசம்பந்தர் பூசத் தீர்த்தச் சிறப்பை, "மாதவத்தோர் வானோர் ஏனோர் தைப்பூசம் ஆடி" என்று தமது தேவாரத்துள் எடுத்துப் பாராட்டுகின்றார்.

## குத்தாலம்

இத்தலம் காவிரித் தென்கரையில் ஒருமைலில் உள்ளது. இறைவன் கையில் ஊன்றிவந்த கோல் குத்தாலமரமாக மாறியதாக வரலாறு கூறுகிறது. சுந்தரர் இத்தலத் தீர்த்தமாகிய காவிரியில் நீராடித் தன்னைப் பற்றிய புதியநோய் நீங்கப்பெற்றார். சூரியன் கார்த்திகை ஞாயிறு உதயத்தில் காவிரியில் நீராடி இறைவனை வழிபட்டு ஆற்றல்பெற்றான். அவ்வாற்றலால் அசுரனைவென்றான். இன்றும் கார்த்திகைமாத ஞாயிறன்று இறைவன் இறைவியோடு காவிரியில் தீர்த்தம் கொடுக்கிறார்.

“ உன்னியெப் போதும் நெஞ்சுள்
ஒருவனை ஏத்து மின்னோ
கன்னியை ஒருபால் வைத்துக்
கங்கையைச் சடையுள் வைத்து
பொன்னியின் நடுவு தன்னுள்
பூம்புனல் பொலிந்து தோன்றும்
துன்னிய துருத்தி யானைத்
தொண்டனேன் கண்ட வாறே.”

## மாயூரம்

இத்தலம் காவிரிநதியின் தென்கரையில் உள்ள புண்ணிய தலங்களுள் சிறந்தது. காவிரிக்குத் தெற்கே ஒரு மைலில் விளங்குவது. அசுரன் ஒருவன் காவிரி நீரைக் குடிக்க ஆரம்பித்தான். இறைவர் அந்த அசுரனை அழித்தார். பின்னர், அவ்விடத்திலேயே தங்கினார். அவ்விடத்தில் காவிரியில் நீராடி, மாயூர நாதரை வழிபடவேண்டும் என்று புராண வரலாறு கூறுகின்றது. இறைவனை இறைவி மயில்வடிவம் எடுத்து வழிபட்ட சிறப்பினையுடைய தலம் இது. அக் காரணம்பற்றித் தலம் மாயூரம் என்னும் பெயரினைப் பெற்றது. இந்திராணியும் வழிபட்டதாக வரலாறு. இந்தத் தலத்தில் முக்குறுணிப்பிள்ளையார் சன்னிதி வழிபடவேண்டியது. கோயிலின் வடக்குக்கோடியில் ஆதி மாயூரநாதர் சன்னிதி இருக்கிறது. இவ்விடத்தில்தான் ஐப்பசிமாதத்தில் விரதம் இருந்து காவிரி நீராடுபவர்கள் தங்கள் விரதத்தை முடிக்கிறார்கள். அரம்பை காவிரியில் நீராடிக் கல் உருவம் நீங்கப் பெற்றாள்.

காவிரி துலாக்கட்டத்துக்கு இடபகட்டம் என்று பெயர். காவேரிப் புராணத்துள் கூறப்படும் அனவத்தியை, நாதசர்மா இவர்களுக்குத் தனியே ஆலயம் இருக்கின்றது. காவிரி நீராடுபவர்கள் முடிவில் மயிலம்மையையும், சட்டநாதரையும் அவசியம் வழிபட்டே செல்வார்கள். கடைமுகத்தன்றோ அல்லது அடுத்த நாளோ இவ்வழிபாட்டைச் செய்து முடிக்கவேண்டும். அவ்வாறுசெய்தால் காவிரிநீராடிய பயன் கிட்டும். இடப தீர்த்தக்கரையில் விசாலாட்சி விசுவேசுவரர் கோயில் இருக்கிறது. மற்றும், அபயாம்பாள் மாயூரநாதர் கோயிலும் உள்ளது. இக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. தேவாரம் பெற்ற தலம். காவேரிப்புராணம் இந்தத் தலத்தைக் காசிக்கும் மேலான புண்ணிய தலமாகக் கூறுகிறது.

"அந்தண்மதி செஞ்சடையர் அங்கணெழில்
கொன்றையொ டணிந்தழகராம்
எந்தமடி கட்கினிய தானமது
வேண்டிலெழி லார்பதியதாம்
கந்தமலி சந்திநெடு காரகிலும்
வாரிவரு காவிரியுளால்
வந்ததிரை யுந்தியெதிர் மந்திமலர்
சிந்துமயி லாடுதுறையே."

## காவேரிச் சிறப்பு

ஆதிமா தவமுனி அகத்தி யன்தரு
பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி
மாதர்மண் மடந்தைபொன் மார்பில் தாழ்ந்ததோர்
ஓதநீர் நித்திலத் தாமம் ஒக்குமால்.

சையமால் வரைபயில் தலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும்
உய்யவே சுரந்தளித் தூட்டும் நீரது.

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பே ரறங்களும் வளர்க்கும் ஈகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது.

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்(து)
எம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால்.

—பெரியபுராணம்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தோன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# காவேரிப்புராணம்

---

### விநாயகர்

அமிழ்தெனப் போந்த பொன்னி
 யாற்றின்மா காண்மி யத்தைத்
தமிழினுற் கவிதை சாற்றத்
 தக்கவற் கருளு மாறு
இமிழரு விகளி றங்கும்
 இமயமா மலைப்பெண் ணீன்ற
அமிழ்மத கரிமு கத்தைங்
 கரத்தனை உளத்துள் வைப்பாம்.

### பரசிவம்

திங்களந் தெரியல் சூடித்
 தீம்புனற் கங்கை வேய்ந்து
பிங்கள மேனி வாய்ந்து
 பிறங்குமான் மழுப்பி டித்து
எங்களஞ் சனம லத்தை
 யெறிந்தருட் குணாங்க ளியும்
மங்கள மறைசை நாதன்
 மலரடி வணக்கஞ் செய்வாம்.

## மலைமகள்

சஞ்ஞைநா யகன்க ரங்கள்
    தமந்துரந் ததுபோ லென்றன்
அஞ்ஞையின் றன்மை போக்கி
    அறிவருட் டொழில்வி ளக்கி
செஞ்ஞைமித் திகச்சி றப்பிற்
    சிறந்தமா மறைசை மேவி
மஞ்ஞையின் சாயல் வாய்ந்த
    மலைமகட் கடிமை செய்வாம்.

## காவேரியம்மன்

மாவேரி நல்லுருவிற் பொற்கென்று
    மலைமகள்கை மலரின் முன்னாள்
தூவேரி னுற்பவித்த கங்கையினும்
    விழுமியதாய்த் துறுமிப் பூத்த
பூவேரி யமுனையிற்பொங் கிடவபீட்
    டங்களெலாம் பொழியப் போந்த
காவேரி மா நதியைக் கைக்கமலங்
    குவித்திறைஞ்சிக் கருத்துட் கொள்வாம்.

## வாழ்த்து

மாதமும் மாரி பெய்ய
    மன்னவன் செங்கோற் றுய்ய
வேதவேள் விகளு மோங்க
    விதிமுறை யாக மங்கள்

பூதல மியாவு மல்க
பொன்னிமா நதிநீர் நல்க
நீதிமா தவத்தோர் சூழ்க
நீறுமைந் தெழுத்தும் வாழ்க.

## தீர்த்தவரமடைந்த அத்தியாயம்

''சய்யவரை தனில்தோன்றித் தவுமிகத்திற் புகுந் தாடும், வய்யமா னிடர்க்குமுத்தி வல்லபங்கள் மிக வழங்கும், துய்யகா விரிமகிமை தொகுத்துரைத்தாய் துலைத்தடமும், உய்யநதி தீர்த்தங்கள் அதிலாடுந் திற முரைப்பாய்.''

தேவவர்மன் என்னும் அரசன் சுமந்துமுனிவரைப் பார்த்துப் பின்வருமாறு வினவுகின்றான். முனிபுங் கவரே! காவிரிநதி எவ்வெச்சிறப்புக்களால் மற்ற நதி களைக்காட்டிலும் சிறந்த தூய்மைபெற்று விளங்கு கிறது? அந்த நதியின் பெருமையினையும், சிறப்பினையும் அடியேனுக்கு மிக விளக்கமாகக் கூறியருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். தேவவர்மனுடைய சிறந்த உள்ளத்தைக்கண்ட சுமந்துமுனிவர் காவிரியின் பெருமையை அவனுக்குக் கூறலானார்.

மகாகயிலாயத்தில் இறைவன் இறைவியோடு இட பத்தில் வீற்றிருக்கின்றார். அவ்வமயம் சில அன்னங்கள் பொன்னொளிபெற்று விண்ணிடைப் பறந்தன. இக் காட்சி விண்ணிடை என்றுமே காணாத காட்சியாக இருந்தது. அவ்வாறு பறந்த அன்னங்கள் இறைவனை யும் இறைவியையும் முறையாக வணங்கின.

வணங்கிய அன்னங்கள், இறைவனிடம் தாங்கள் யாவும் புண்ணியநதிகள் ஆவோம்; எங்களைப்பற்றிய

பாவத்தைப் போக்கிக்கொள்ள எண்ணிக் காவிரியை அடைந்து நீராடினோம்; அப்புண்ணிய நதியில் நீராடியதால் எங்களைப்பற்றிய பாவங்கள் நீங்கி இத்தகைய ஒளியைப் பெற்றோம் என்று கூறின.

பெருமானே! நாங்கள் பெற்ற இப்பெரும்பேறு உலகிலுள்ள மக்கள் காவிரிநதியில் ஐப்பசிமாதத்தில் நீராடினால் பெறவேண்டும்; அவர்களுக்கும் இவ்வருளொளி கிட்டவேண்டும்; இத்தகைய வரமே நாங்கள் வேண்டுவது என்றும் கூறின.

"வருந்தியுரைத் திடமகிழ்ந்து வரதனந்தப் படியருளி, திருந்தியகா விரியில்துலை திங்களிலா டுந்திறனல், பொருந்தியதீர்த் தங்களெலாம் புகுந்தாடும் பயனுடையிர், பெருந்திருமே வியவுமது பெரும்பதியே குங்களென்றார்."

## அனவத்தியை சரிதம்

"அன்பர்க்கன் பானபர னருண்முகம்பார்த் துமை வகுப்பாள், துன்பர்க்க வலைதுலைக்கும் துலைக்காவேரியின்மகிமை, நன்பர்க்கம் வைத்தருளும் நவில்முருகனையுடையிர், என்பக்கம் இனிதருள்வாய் யிச்சையுடயேனென்க."

இறைவி இறைவனை நோக்கித் துலாகாவேரியின் சிறப்பையும், அவ்விடத்தில் நீராடுவோர் அடையும் மேன்மையையும் எனக்கு விரிவாகச் சொல்லியருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டாள். இறைவி வேண்டுகோளை ஏற்று இறைவனும் காவிரிநதியின் பெருமையைக் கூறுவாராயினர்.

நாதசர்மா என்ற அந்தணன் ஒருவன் இருந்தான். வேதமறிந்த அந்தணர்களுள் அவன் மேம்பட்டவன். இறைவன் திருவடிகளை என்றும் மறவாதவன்.

நாதசர்மாவிற்கு அழகே உருவானுலொத்து எல்லாக்குணங்களும் நிரம்பிய அனவத்தியை என்னும் நல்லாள் மனைவியாக வாய்த்தாள். அவளும் தன் கணவனைப்போன்று இறைவன் திருவடியை என்றும் மறவாதவள். என்றும் தன் கணவன் ஏவல்வழி நிற்பவள். நல்லொழுக்கமுடையவள். இனிய மொழி பேசுவதைத் தவிர வேறு அறியாதவள்.

இத்தகைய அருங்குணமுடைய இவள் சகளவடிவினனாகிய இறைவனை மனத்தில் முறையாக இருத்தினுள். அடியவர்களுக்கு என்றும் அறுசுவை உணவு அளித்து மகிழ்வாள். விரதம் முதலிய நியமங்களில் எப்பொழுதும் ஒருசிறிதும் தவறமாட்டாள்.

இத்தகைய மேலான நெறியில்நின்ற அனவத்தியைக்கு அவள் கணவராகிய நாதசர்மா அவள் கேட்டுக்கொள்ள, காவிரிநதியில் ஐப்பசிமாதத்தில் நீராடினுல் அடையக்கூடிய சிறப்புக்களை எடுத்துச் சொன்னுர். பெண்ணே! மூர்த்தி, தலம், தீர்த்தமாகிய மூன்றுனும் பெருஞ்சிறப்புப்பெற்று விளங்கும் தலம் மாயூரம் என்னும் சிவதலமாகும். அத்தலத்தில் ஒருவர் ஐப்பசிமாதம் முழுவதும்தங்கி நியமமாக நீராடவேண்டும். அவ்வாறு ஆடினுல் நம்மைப்பற்றிய பிறவித்துயர் நீங்குவதோடு மேலான வீடுபேற்றையும் அடையலாம். இதுவே காவிரிநதியில் நீராடுவதால் ஆன்மாக்கள் அடையும் சிறந்த பயன் என்றுகூறி அக்காவிரி புகும் நாட்டின் உயர்வினையும் கூறினுர்.

பின்வரும் பாடல்களால் சோழநாட்டின் சிறப்பும், காவிரிநதியின் சிறப்பும் பாராட்டப்பட்டுள்ளன.

“பிறந்த கத்துறு பேரணிப் பொருள்களைப் பெற்று
நிறந்த யங்கிய காவிரி யென்னும்நே ரிழையாள்
அறந்த மைத்தருள் பெருகுசோ ணாட்டிடை யடைந்து
சிறந்த கீழ்கடற் செல்வனைச் சேர்ந்திடச் சென்றாள்.

பசுவுக் காய்ப்பெறும் பாலனைத் தேர்ப்பரு தியிலிட்
டசுவை போக்கின னபயனி லொருவன்முன் னரைத்த
சிசுவைத் தூக்கினேக் கியசிவன் றன்னையே காண
முசுவைப் போலவே பாய்ந்துவந் தனள்பொன்னி
[முன்னி.

நாக நண்டேறும் பானைதப் பளைசித ரை
யூக மாதிய விலங்குபுட் பூசைகொண் டுகந்த
ஏக நாதனை யிறைஞ்சிட விதயத்தி லெண்ணி
யோக மோடுவந் தனள்பெருங் காவிரி யுந்தி.

செம்பி யன்வள நாட்டிடைச் சிவனையர்ச் சித்து
நம்பி யங்குறைந் தாரவர்க் குணவினை நல்கப்
பம்பி யவ்விடை படர்வனென் றுசையாற் பாரித்
தெம்பி யப்புவி யியங்கினள் காவிரி யென்பாள்.

சாரப் பாறையுள் ளருவிசோர் தரச்சதா கதிதான்
ஆரச் சாகைகொண் டரைத்தபூஞ் சாந்தினை யளவி
நாரச் சிகர கரங்களால் நம்பனுக் காட்ட
வாரத் தாற்பொன்னி கவுரிமா யூரத்தில் வந்தாள்.

கொண்டல் கண்படு தண்டலைக் கொழுமலர் கொண்டு
தண்ட ரிஞ்சல திரைக்கையாற் றவத்தொடு தரும
மண்ட னம்பெறு கவுரிமா யூரநா தனுக்குக்
கண்ட ருச்சனை செய்தனள் கவிகொள்கா வேரி.”

இவ்வாறு காவிரிநதி சோழநாட்டினை அடைந்து அந்நாட்டிற்கு அளித்த சிறப்புடைய வளங்களைக் கூறிய ஆசிரியர். காவிரிக்கரையில் சிறந்து விளங்கிய சிவதலங்களையும் குறிப்பிடுகின்றார்.

*"அத்துனியின் கரையின் மனோ கரமாயிச ஞலையா கேத்திரமதிக மாயங் கெய்தும், நத்துவித முத்துகுக் கும் பழனஞ் சூழ்ந்த நம்பனுறை மாயூரம் திருவெண் காடு, கொத்துநிறை சோலைகள்சூழ் திருவை யாறு குதுகஞ்சை யிடைமருதூர் குளிர்சாய்க் காடு, சித்து நிலை யானவாஞ் சியமிவ் வாறுந் திருக்காசிக் கெதி ராகச் சிறக்கு மன்றே."*

இப்பாடலால் மாயூரம், திருவெண்காடு, திருவை யாறு, திருவிடைமருதூர், திருச்சாய்க்காடு, திருவாஞ் சியம் ஆகிய ஆறு தலங்களும் காசியினும் மேலான பலன்களைக் கொடுக்கும் சிறப்பினையுடையது என்று சிறப்பிக்கின்றார்.

இத்தகைய சிறந்த பல சிவதலங்கள்சூழ்ந்த சோழ நாட்டை அடைந்து இறைவனை முறையாக வழிபட்டு முடிவில் மாயூரத்தலத்தை அடையவேண்டும். அங்கு காவிரிக்கரையில் உள்ள துலா கட்டத்தில் நியமமாக நீராடவேண்டும். பின்னர், கௌரி மாயூரநாதனை வழி படவேண்டும். அவ்வாறு முறையாக வழிபடுவதே நாம் உய்வதற்கு உரிய நெறியென்று நாதசன்மா கூற, அனவத்தியையும் விரதங்களை அனுட்டித்து நீராடி இறைவனை வழிபடத் தொடங்கினாள்.

## முத்திக்கேதுரைத்தது

அனவத்தியை தன் நாயகனுகிய நாதசன்மாவிடம் முத்திக்கேதுவான மார்க்கங்களைக் கூறியருளுமாறு

வேண்டுகிருள். என் இறைவரே! அடியாளாகிய யான் உங்கள் திருவடியிணைகளை இடைவிடாதுபணிதலையே மேற்கொண்டு உங்களுக்குத் தொண்டுசெய்து வாழ்கின்றேன். நல்ல அறிவும், ஊக்கமும், நல்லொழுக்கமும், நோன்பும் வேண்டி உண்மையாக உங்களுக்குப் பணிவிடைபுரியும் சிறந்த தன்மையுடைய தலைவியாக நான் அமைந்துள்ளேன். தாங்கள் எனக்குப் போதித்தவாறு நித்திய நியமங்களையும் தவருது செய்துவருகின்றேன் என்கின்ருள்.

"மருக்காலு மலர்க்குழலு மதிமுகமு நகிலிணையால் வளைபு மெய்யும், பெருக்கார்வத் தருமழகும் பேணிநு ளொழுக்கத்தால் பிரியங் கூர்ந்து, விருக்காற்றி னேகிய கேள் வளையிருகண் ணுனேக்கி யேதந் தீரத், திருக் காற்ரு மரைபணிந்து செப்புவாள் சித்தமதிற் றிகழ்ந்த தெல்லாம்.

ஊக்கியசாந் தமுமறிவு மொழுக்கமுங்கொள் கையு நோன்பு முண்மை யாகத், தாக்கியநின் பணிவிடையைத் தான்புரியத் தலைவியாய்ச் சார்ந்தேன் செய்த, பாக்கியத்தா லறிவின்மை யலதறிவு கலந்தாலும் பகல்க டோறும், போக்கியபன் னியினுலே செயல்முழுதும் பூண்பதுவப் புதுமை செய்தீர்.

நீசகல முஞ்சமமாய் னிறுத்தியரு ணெறிநின்ருய் நிதமு மூழ்கி, போசகபோக் கியப்பொருடான் புணர்க் கிலனித் திடிலதிதி பூசை நேரின், மாசகல வனுட்டான முபசரித மோமம்வழி பாடு மன்னல், வாசகஞ்செய் திடவழங்கல் வாங்கல் மற்றைக் காரியங்கள் வளைய வென்றும்."

அனவத்தியை இவ்வாறு கூறி முடிவாகத் தன் கணவனிடம் கேவலமுத்தி அடையவே என் மனம்

மிகுதியும் விரும்புகின்றது என்கிருள். நாதசன்மாவும் தன் மனைவியின் கருத்தை உணர்ந்து நாம் இருவரும் மாயூரநகர் சென்று தூய காவிரியில் நீராடி இறைவனை வழிபட்டு அங்குத் தங்கிவாழ்வோம் என்றார். இதனை,

"சித்திநமக் கெவ்வளவிற் சித்திக்கு மவ்வளவும் நியதி தீராப், பத்தியுட னிருவோரும் பனிமதியின் கொழுந்தினெடு படஞ்செ ருத்தி, நித்தியினைச் செஞ் சடிலத் தணிந்தபிரான் சிவையொ டொறுந் தேன் றிகந்த, தொத்திணர்ப்பூஞ் சோலைசெறி தூயமா யூர நகர் துன்னி வாழ்வோம்"

என்ற பாடலால் உணரலாம்.

இவ்வாறு மாயூரநகரை அடைந்தவர்கள் முறையாகக் காவிரியில் நீராடி இறைவனை வழிபட்டார்கள். அங்கு, பாச முத்தனுன அடியார்களின் வரலாற்றை அறிந்தார்கள். தாங்களும் அவ்வாறே நியமந்தவருது நாள்தோறும் காவிரிநதியில் நீராடி இறைவனையும் வழிபட்டார்கள்.

மாயூரநகரை அடைந்து காவிரிக்கரையில் தங்கி ஒருமுறை நீராடினவன் வரதனுவான். பின்னர் மாயூர நாதரையும் கௌரியம்மையையும் வழிபாடு செய்வானுனல் அவனுக்குப் பிறவியில்லை. அன்றியும் முத்தியும் பெறுவான். மாயூரம் சென்று வழிபடுவோர் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றையும் ஒருசேர வழிபட்ட பெரும்பயனை அடைவர். கிரகவாதனையுள்ளவர்கள் பொன்னிநதியில் பரிசுத்தமாக நீராடினுல் அவ்வாதனை நீங்கப்பெற்று முடிவில் முத்தியின்பமும் உறுவர். இது உள்ளங்கை நெல்லிக்கனி போன்றது.

புகழ்ச்சியல்ல; உண்மையேயாம் என்று கூறி முடிவாக மாயூரதலத்தில் தங்கி வழிபடுவோர் தங்களைப் பற்றிய குடும்பபந்தங்கள் நீங்கப்பெற்று முடிவில்லா இன்பமும் பெறுவர் என்றும் கூறினர். இச்சிறப்பினை,

"மாயூரம் காவிரியின் மருவியொருக் காலாட வரத னுவான், மாயூர நாதனையுங் கவுரியையுங் காணவரு சென்ன மில்லை, மாயூரக் காவேரி மஞ்சனத்தான் முத்தி வளம் வண்மை செய்வான், மாயூரப் பதிசிவத்தை வழங்குமதில் வசித்திருக்கு மாத வற்கே.

முத்திமா யூரநகர் முன்னவன்கா ணத்தருவார் பொறிமூன் ருலே, முத்திதருந் தலந்திர்த்த மூர்த்தியிம் மூன் றினைமுடுகி வணங்க வேண்டும், முத்தியருட் காவிரியா திகண்மூன்று மொழிந்தயலாய் மொழிவ தெங்கே, முத்திகைமி லாமாட மாயூரக் காவிரியின் மொழிகா லத்தில்.

கேத்திரத்தில் திவ்வியமா யூரந கரதனைக்கெழுமிக் கிரகமாதி, பாத்திரபுண் ணியகாலம் படரவற வடிவாகிப் படர்ந்த பொன்னி, வித்திரநீ ரிற்படிந்தா னமக்கு முத்தியங்கையிலே மேவு மிது, தோத்திரமாய்ச்சொல்வ தல்ல உண்மையிதில் சந்தேக மில்லையென் ருேகாய்.

முடங்கரவ வேணிகொண்ட மாயூர முதல்வனடிக் கமல முன்னித், திடங்கொண்ட மனத்துடன்சேர்ந் திருந்துசய்யா சலத்தெழுந்து சென்ற பொன்னி, விடங்கவளங் கேள்விசெய்து விற்றிருக்கில் றுலைமதியின் வினைய லக்கண், மடங்கனையும் குடும்பபந்தம் வந் தனுகா திரிந்தோடும் வாய்மை யம்மா"

என்ற பாடல்கள்கொண்டு ஒருவாறு உணரலாம்.



தலைக்காவேரியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் திருமஞ்சனம் ஆடுதல்.



காவேரி உற்பத்தியாகும் சய்யமலை.

## காவிரியுற்பத்தி உரைத்தது

அனவத்தியை தன் கணவராகிய நாதசன்மாவிடம் அணுகி என்பால் உங்கட்குக் கருணையுண்டென்ருல் காவிரிநதிக்குக் கவேரகன்னியென்ற பெயர் ஏற்படக் காரணம் என்ன? துலாமாதத்தின் பெருமை யாது? இத்தகைய காவிரிநதிக்கு ஏற்பட்ட சிறப்பின் கார ணங்களை அடியாளுக்கு விளக்கியருளவேண்டுமென் ருள். நாதசன்மா பெண்ணே! நீ உன்னுடைய மலை போன்ற இரு தனங்களையும் தாமரைமலர் போன்ற எனது கண்களுக்குத் தெரியாமல் ஆடைகொண்டு மறைத்துள்ளாய் ஆயினும் உனக்கு எல்லாப் பாவங் களையும் போக்கும் காவிரியின் வரலாற்றைக் கூறுகின் றேன். விருப்பத்துடன் கேட்பாயாக என்று விநய மாகக் கூறினர். இதனை,

"குணக்கு வரியினிற் சதமுக மாகக் கூடிய பொன் னிமா நதிக்கு, தனக்குருக் கவேர கன்னியென் றொரு பேர் சார்ந்ததெவ் விதத்தினுற் சால, வணக்குவப் பொழிந்த துலாமதி யிடைமா கான்மிய முள்ளதெவ் வண்ண, மினக்குள கருணை யென்னிடத் துமக்கிங் கிருந்திடி லெனக்குரைத் தருள்வாய்.

நகிலமென் றெழுந்த மலையிரண் டினையு நளினமா மலர்க்கண் டாமற், றுகிலினுல் மறைத்த தோகையே யுனக்குச் சொன்மனப் பூட்கையாற் றுன்னு, மகிலபா வங்க ளகத்தியுள் ளுவகை யருளிய காவிரி நதியின், நிகிலபா வனமா கான்மியந் தொகுத்து நிகழ்த்துவ நீநயந் ததைக்கேள்"

என்பதுகொண்டு அறியலாம்.

அன்றியும் பெண்ணே! இக்காவிரியின் சிறப்பைப் பிரமன், திருமால், இறைவன் ஆகிய மூவராலும் சொல்லமுடியாது: ஆயினும் எனக்குத் தெரிந்தவரை சுருக்கமாகக் கூறுகின்றேன்; அதனை நீ கவனமாய்க் கேள் என்றார்.

கவேரன் என்பவன் முனிவர்களுள் மேம்பட்டவன். அம்முனிபுங்கவன் நீண்டநாள் தனக்கு ஒரு மகப்பேறின்றிக் கவன்றான். பிரமனைக் குறித்துக் கடுந் தவஞ்செய்தான். பிரமனும் தவத்திற்கிரங்கி வெளிப்படக் கவேரமுனிவர், தனக்கு நல்ல மகவு ஒன்று கொடுத்தருளுமாறு வேண்டினார். பிரனும் முனிவரே! இப்பிறவியில் உமக்கு மகப்பேறு அடையும் புண்ணியம் இல்லை; ஆயினும், உமது தவத்திற்கு மெச்சி ஒரு அழகிய பெண்மகவு அருளுகின்றேன் என்று வரம் கொடுத்தார். அப்பெண்ணும் முனிவரிடம் கவேரன் மாமகள் என்ற பெயர்பெற்று வளர்ந்தாள். இந்த நங்கையே பின்னால் காவிரி என்னும் பெயருடன் தென்னாட்டைப் பொன்னாடாக ஆக்கினாள். மேலும், தன்பாலடைந்து நீராடுவோர்களது சகல பாபங்களும் நீங்கப்பெற்று முடிவில் அவர்கட்கு முத்தியின்பமும் அளிக்கப்பெறும் சிறப்பினையும் பெற்றாள். அல்லாமல் தன்பால் ஒருவர் அடைந்து, பிதுரர்கட்கு உரிய கடன்களைச் செய்து எள்ளும் தண்ணீரும் இறைத்தால் அவர்கட்கு ஏற்ற பயன்களையும் அளித்தாள். இத்தகைய அழிவில்லாத சிறந்த நிலையைக் காவிரியாறு பெற்றது. இவ்வுண்மைகளை,

"உருமவெவ் வினைகள் ஒழியவுத் தமகா லந்தொறு மாடலா லுறழ்ந்த, தெருமரல் தீரக் கீர்த்தனஞ்

செயலால் தேகத்தால் பரிசிக்கும் சிறப்பால், தருமமோ டருத்தம் காமமீ ளாமல் சார்கதி முத்தியின் னுன்கும், பெருமனு னருள்வே னறநதி களுக்குப் பேசரும் பெரு மையை யுடையேன்.

"கலைமுழு தறிந்த கவேரன்மா மகளாய்க் காசினி வந்தகா விரிநான், நிலையற மருத்தம் காமிய னிருவா ணந்தனை நேசமுற் றளிப்பே, னலைசெறி நதிகள் தீர்த் தங்கள் அனைத்தும் ஐயநின் னருளினு லெந்தன், தலையடைந் தகண்ட பவங்களு மொழிந்து தருமங்கள் தழைக்குமெப் பொழுதும்.

வரோதய மான மாதவ வுனக்கு மாதர வைத்து கந்தவென் னதியிற், சுரோதநீ ரதனுல் தேவர்தென் புலத்தோர் சூழ்வர்க ளுவகைநற் குலீனர், திரோதமா மயல்தீர்ந் திடத்தில நீராற் செய்திடிற் றப்பண மதனை, விரோதமே வாம லுளத்திலின் புறுவர் மிக்கருள் கூர்பி துர்க் குழுக்கள்"

என்பதுகொண்டு அறியலாம்.

அகத்தியரை மணந்துகொண்ட காவிரி அந்தப் பெயருடன் தென்னுடடைந்து எல்லா நதிகளுக்கும் தலைமைநதியென்னும் சிறந்த பெயரினைப் பெற்றது. அன்றியும் முக்கட்பரமனின் அருள்பெற்று வடக்கே வளங்கொழிக்கும் கங்கையாறுபோன்று தென்திசையி லுள்ளோர்க்கு வளப்பம் கொடுத்தலால் தெக்கண கங்கையென்னும் சிறப்புப்பெயரையும் உடையது. இவ்வாறு பெயர்பெற்ற காவிரி எழுகடலும் ஒன்ருக இணைந்ததுபோலப் பேரொலி செய்து, அலைகளைப் புரட்டி, உலகிலுள்ள ஏழு நதிகளுக்குள் தலைமை பெற்று, எல்லாப்பொருள்களும் தன்னைவந்து இரக்கும்

ஒரு உயர் பண்பினையும் பெற்றது. அல்லாமல் எவ் வகைப் பாதகஞ்செய்தோராயினும் தன்னையடைந்து நியமத்துடன் ஆடினால் அவர்களது பெரும்பாவத் தைப் போக்கும் பேரருளையும் பெற்று விளங்கிற்று. இத்தகைய பெருஞ்சிறப்பு இக்காவிரிநதிக்கன்றி வேறு எந்த நதிக்கும் இல்லை என்னும் பெரும்பேற்றினையும் உடையதாக விளங்குகிறது.

"பூண்டபத் திமையால் தவுலிமா மதியில் புண் ணிய மானிடர் புகுந்து, மாண்டநின் தீர்த்தம் ஆடிடில் அவர்க்கு வரும்பயன் உரைப்பதென் வரங்கள், வேண் டவியந் திடுந்தீர்த் தங்களென் றனை விடாதுனை யடுத்திட விரும்பி, ஆண்டகா வேரி யெனமுனி வரத்தை யடைந்தவற் குரிமையு மானாள்."

இவற்றால் காவிரியின் தோற்றமும், மக்களுக்கு அந்தி செய்யும் அருளும் இன்னதென்று உணர்த்தப் பட்டது. சகலபுண்ணியங்களையும் தழைக்கச்செய்வது காவிரி. காவிரிநதியில் ஆடுவதால் ஆடுவோர் முத்தி பெறுவது திண்ணம் என்னும் உறுதியையும் நாத சர்மா அனவத்தியைக்கு உணர்த்தினர்.

## காவிரிமகிமை உரைத்தது

நாதசர்மா காவிரிநதியில் ஐப்பசிமாதத்தில் நீராடு வதற்குமுன் மேற்கொள்ளவேண்டிய சில நியதிகளைக் குறிப்பிடுகின்றார். துலாவிரதத்தை மேற்கொள்வோர் வைகறைப்போதிலே படுக்கைவிட்டு எழவேண்டும். உடன் தமது நித்தியகடன்களை முடித்துக்கொண்டு முறைப்படி காவிரிநதியில் நீராடவேண்டும். உணவு கொள்ளல் கூடாது. இறைவனைக் காலை, பகல், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் வழிபட்டு அருச்சனை

செய்யவேண்டும். களபம் கஸ்தூரி சந்தனம் முதலிய பொருள்கள் பூசிக்கொள்வதை நீக்கி ஐம்புலன்களே யும் அடக்கவேண்டும். இவ்வாறு ஐப்பசிமாதத்தில் நியதிவழுவாது காவிரிநதியில் நீராடுவோர் பிரும்மா வர்த்தம், குருட்சேத்திரம், புட்கரம், அவிமுக்தம், பிரயாகை போன்ற சிறந்த புண்ணிய தலங்களே வழி படுவதால் அடையப்பெறும் புண்ணியங்களேக்காட்டி லும் மிக மேலான புண்ணியங்களே அடைவார்கள். மேலும் ஐப்பசிமாதத்தில் எல்லாநதிகளும் காவிரியை வந்து அடைந்து நீராடுகின்றன. இக்காரணத்திஞல் காவிரிநதி எந்நதிக்கும் இல்லாத ஒரு தனிச்சிறப்பைப் பெற்று விளங்குகிறது. இதனே,

"திருநிக ராகிக் குறுநகை விளேத்துந் தேசிக மாது புட் கரத்திற், குருநிலம் பிரதா தகமவி முத்தங் குளிர் பிர யாகைசா னவியுங், கருநிறக் கடலுங் கலந்த திற் பிரமா வருத்தத்தில் கருத்திலன் புற்று, மரு னிறை மலர்வா ரிதிபுகுந் தாடும் பலன்துலாக் காவிரி வழங்கும்"

என்ற பாடலால் அறியலாம்.

உலகில் கிரேதாயுகத்தில் ஞானமும், திரேதா யுகத்தில் யாகமும், துவாபரயுகத்தில் அருச்சனேயும், கலியுகத்தில் தானமும் முத்தியடைவதற்குரிய வழிகள் என்று கூறப்பட்டுள்ளன. ஆஞல் இவைகள் யாவும் ஒருசேர ஐப்பசித்திங்களில் காவிரியில் நீராடுவதால் ஒருவர் அடையப்பெறலாம் என்று கூறுகின்ருர். காவிரியாறு என்றும் மேலான புண்ணியத்தையே மக்கட்குத் தரும் என்னும் உண்மை விளக்கப்பட் டுள்ளது. இதனே,

" கீரவா ரிதியைக் கடைதலால் எழுந்த கிளர்கவுத் துவமுதன் மணிபோல், ஆரவா ரஞ்செய் காவிரி துலை யில் ஆடவல் லபங்களை யளிக்குஞ், சாரவா வியனா பகமுத லுகத்திற் சங்கரன் பூசையா மிரண்டில், ஈரவா ரத்தோ டளித்தலே யதிக மிசைத்திடுந் துவாபரங் கலியில்"

என்பதுகொண்டு அறியலாம்.

நிலையாத யாக்கையைப் பெற்ற மக்கள் தங்களை நரை, திரை, மூப்பு வந்து பற்றுவதற்குமுன் காவிரி நதியில் நீராடிப் புண்ணியத்தைப் பெறவேண்டும். அவ்வாறு பெறுவதைத் தவிர ஆன்மாக்கட்கு வேறு வழியில்லை. நரை திரை மூப்புவந்து ஐம்புலச்சேட்டை கள் யாவும் அடங்கிச்செயலற்றநிலையில் புண்ணியத்தை அடையும்வழியும் கிட்டாது. ஆகவே, திகைப்பைத் தரும் முதுமையை அடைவதற்குமுன்பே நல்லவழி களைத் தேடிப் பெற்றுவிடவேண்டும். அதற்கு உரிய ஒரேவழி காவிரிநதியில் நீராடுவதே என்கின்றூர். ஆகவே, ஆன்மாக்களுக்குவேண்டிய எல்லாப் பயன் களையும் இந்நதி ஒன்றே தன்பால் நீராடுவோர்க்குக் கொடுத்துவிடும். இவ்வுண்மையை,

" தாதுக ளேழால் அமைந்தகங் காரஞ் சஞ்சலம் பயமுத லனைந்து, போதுகண் டிருக்கும் பூட்சியை மேதை பொருந்திஞேர் போற்றுத லெங்கே, கோது கள் நிறைந்து நரைதிரை குழுமிக் குறுகுட னசிக்க முன் கூடி, சாதுகள் துதிக்குங் காவிரி தோய்தல் தான லா துபாயம்வே றில்லை.

" பகைத்திடு முரோகம் நரைதிரை முப்புப் பாரித் தைம் புலன்களின்விருத்தி, தகைத்தடங் கினபோ தறந்

தனக் காய சாதன சத்தியு மிலையாந், திகைத்திடும் விருத்தத் தெசைவரு முன்னந் தேடிட வேண்டும்நல் லறத்தை, உகைத்திடு மராள னுலகில்வை குவன்கா வேரியில் ஆடிய உரவோன்''

என்ற செய்யுள்களால் அறியலாம்.

அன்றியும், மத்தியநாட்டைச் சார்ந்த வினதா என்ற ஒரு பெண் விசயமலையை அடைந்து, தலைக் காவிரியில் துலாநீராடலை முறைப்படி மூன்று ஆண்டு கள் நிறைவேற்றினள். அங்கே தங்கிப் பல தானங் களைச்செய்து முடிவில் இறைவன் திருவடிசேர்ந்தாள்.

''ஆதிகா லத்தில் ஆதியா முகத்தில் அடைந்த பாற் றுமகற்ப மனுக, சாதிகள் தழைக்கும் மத்திம தேசம் தன்னிலோர் பார்ப்பனி மனத்தில், நீதிகள் யாவும் நெறிமுறை யாய்ந்து நினைத்தனள் உயிர்நிலை நிகழ்த்தி, ஈதிக ளிறக்க விறந்திடுங் கிருமிக் கிடங்களா யிருந்திடு மென்றும்.

சயமலைச் சாரல் உறும்பெரு வனத்தில் தங்கிய வாச்சிர மத்தாள், நயமருள் பிரமத் தியானமுற் றகில சங்கமும் நழுவிநா டோறு, நியமநீங் காமல் அதிதிபூ சனையை நேர்ந்துயிர் களுக்கரு ளொருப்பட்டு, இயம நற் குணமா சாரசீ லஞ்சேர்ந் திந்திய மைந்தையும் அடக்கி.

கிழங்குமென் கனியா திகளயின் ளுடல் கிளர்ந் திடப் புலரியி னயந்து, தழங்குபுண் ணியக்கா வேரியிற் றவுலி மதிவரச் சமயமூன் றிலும்போய், முழங்கநின் ளுடு முயர்ச்சியி லொருப்பா டெய்திட மொய்குழற் சதி யாள், வழங்கரு ணிதியா னிறைந்தசங் கரனை வழிபடல் புரிந்துநோன் பாற்றி.

அலகயர் செபமா சாரமன் பொழுக்க மவியிடு மோமகன் மங்கள், இலகவாண் டொருமூன் றியற்றி யிவ் வாறிங் கிருந்தனள் காவிரி யணையில், உலகமேத் தியவன் னதிமகி மையினு லுறுப்பொழிந் துயர்கயி லையினில், மலகரு மங்க ளகன்றவ ளொருமூ வாயிர நாலுகம் வைகி.''

இன்னோரன்ன பற்பல வரலாறுகளை நாதசன்மா அனவத்தியைக்கு எடுத்துக்கூறி உலக இயலை நன்கு தெளிவுபடுத்தியதோடு முத்தியை அடைவதற்கு உரிய வழிகளையும் விளக்கிக் கூறினர்.

## அனவத்தியை முத்தியடைந்தது

நாதசர்மாவும் அவரது மனைவியாகிய அனவத்தி யையும் மாயூரதலத்தில் வந்து தங்கினர்கள். நியமத் துடன் விரதம் அனுட்டித்தார்கள். அடியார்களுக்கு அறுசுவை உணவு முறைப்படி ஊட்டினர்கள். ஆடை அணிகலன்களைத் தானங்கொடுத்தார்கள். இந்நிலையில் இவர்களிருவரும் இறைவனை நோக்கித் தவஞ்செய்யத் தொடங்கினர்கள்.

"விரைந்துநன் னியமம் வியப்புறும் விரதம் விழைந் திடும் அன்னதா னங்கள், வரைந்தவி வழங்கும் வன் னியி லோமம் மகேசனர்ச் சனையிவை மன்னி, விரைந் தறை மறையா ளனுமனை வியும்நோன் பியற்றியங் கிருந்தனர் விளங்கி, கரைந்தவர்ச் சரங்கள் தொறுந் தொறுங் கதிரோன் கவின்றுலாக் கலந்தகா லத்தில்.''

இறைவன் அனவத்தியையின் விரதசீலங்களைக் கண்டார். அவளுக்கு உரிய முறையில் தாரகமந்திர

மாகிய பஞ்சாட்சரத்தை உபதேசித்தார். நாதசர்மா வும் அனவத்தியையும் செய்த தவப்பயனுல் நாதசர்மா நாதர் என்னும் பெயர் பெற்றுக் கணநாதருள் தலேவ ராஞர். அனவத்தியை இறைவிக்குக் குணேத்தரை என்னும் பெயருடன் தோழியாஞள்.

மாயூரம் அடைந்து இவர்களேப்போன்று தங்கிக் காவிரியாட இயலாதவர்கள் நியமத்தோடு ஆடியவர் களேக் கண்ணுல் காண்பதே பெரும்புண்ணியமாகும். அல்லது காவிரியைக் குறித்து வழிபாடாற்றுதல் வழி பாடாற்றியவர்கட்குத் தானங்கொடுத்தல் இவ்வுண் மைகளேயெல்லாம் அனுபவித்தே அறியவேண்டும்.

“சென்னலச் சென்னெல் ஓங்குமா யூரச் சிவதலத் தேகுகா விரியின், கன்னலுங் கமுகுங் கவின்செயுங் கரையிற் காயநீங் கிடிலவர் விசேடம், நன்னலந் தருங்கே வலத்தைநண் ணுவரிக் காவிரி யாடுறு நர்கள், இன்னலத் தகில வல்லப முத்தி யிலக்குமி தன்னேயு மிசைவார்.

இமையமா தமலன் சொல்லும் இருமைகேட் டிகுளே யாக, வமைவமை வுறுந்தோ ளார்ந்த வனவத் தியையை ஈசன், சமையத்தன் மஞ்சார் நாத சருமனேக் கணேச ஞகக், கமையகத் தனும தித்துக் காவிரி தனே யுட் கண்டாள்.’’

## முனிவர் காவிரிமகிமை உரைத்தது

“ திருக்கறுக்குந் துலேவிடுப்புண் ணியகா லத்திற் சீருடன் உமையாளேச் சிவனேப் பூசை, உருக்கமுற வாற்றியுப வாச நோன்பை யுஞற்றிநிய மத்துறழ்ந் தோர் மூன்றுகால, மருக்கமழ்செங் கமலமல ரிதயத்

தாலே மதித்தறியுந் தீர்த்தத்தா லாண்மை மன்னி, பெருக்கனுந்தீர்த் தமதறுபா னுறுகோடி பிறங்கியகா விரியாடப் பெட்பின் வந்தார்.''

முறைப்படி காவிரிநதியை அடைந்து என்றும் திடசித்தத்துடன் நீராடவேண்டும். உணவின்றியிருந்து விரதத்தை மேற்கொள்ளவேண்டும். பின்னர், காவிரியின் சிறப்பினை எடுத்துக் கூறும் புராண கதைகளைச் சொல்லச்செய்து கேட்கவேண்டும். இவ்வாறு கேட்பவர்கள் பிறவிநீங்கப்பெற்று விடுபேற்றையும் அடைவார்கள். புராணங்கூறுவோர்க்குப் பொன்னும் பொருளும் கொடுத்தல்வேண்டும்.

மேலும் பொன்னிநதியில் முறைப்படி நீராடினோர் பரமனருள் பெற்று அவன்வாழும் கயிலையை அடைவர். பிறவியாகிய பெருந்துன்பம் அவர்களைப் பற்றாது விட்டகலும்.

"தவித்தகடுஞ் சஞ்சார வனந்த னக்குத் தழற்சிகையா கியபொன்னித் தரங்கி ணிக்கண், சவித்தனுமா னிடர்பறவைக் கிடந் தோயிற் சங்கரன்வாழ் கயிலைமலை சார்வர் மாந்தர், கவித்தபவ சாகரத்தைக் கடக்கக் காதல் கருத்திருக்கில் சய்யமலைக் கன்னி யாற்றின், விவித்தமதில் விளம்புமறைப் பொருளாய் நின்று மேன்மைதரு நானத்தை விரும்பிச் செய்வார்.

"வலித்திடுநா பகமன்றித் தருமந் தானம் மகங்கிரியை தவமாதி மதிப்ப தின்றிக், கலித்தபல சாகரத்தைக் கடக்க விச்சை கருத்துடையோ னுகிலிந்தக் காவிரிக்கண், சலித்தலின்றித் துதைந்தாட வுறுதி தண்ணார் சலவிருத்தி யுறும்பொன்னித் தலத்தி லென்றும், பலித்திடுவெம் பவமிறையும் பண்ணா லாகா படர்மனப்பாவந்துரந்து பரிக்கு மன்றே.''

## அயன் காவிரிச்சிறப்பு தீர்த்தங்கட்கு உரைத்தது

பிரமன் காவிரியின் பெருமையையும், அதில் நீராடுவதால் மக்கள் அடையும் பயனையும் அறுபத்தாறு கோடி தீர்த்தங்கட்கும் கூறுவாரானார். காவிரிநதியில் நீராடுவோர் நல்ல கேள்வியும், சிறந்த புலமையும் பெற்று என்றும் புனிதராவார். அன்றியும், குறைபாடு உடையவர்கள் காவிரி புகுந்தாடினால் குறைகள் நீங்கப் பெற்று மனநிறைவினை அடைவார்கள். பாபங்கள் செய்வோர் தம்பால் ஆடுவதால் ஏனைய தீர்த்தங்களின் ஒளி எல்லாம் குறைகின்றன. அவ்வொளிகளைப் பெறுவதற்காகக் கங்கை முதலிய அந்தத் தீர்த்தங்களெல்லாம் காவிரியில்வந்து நீராடித் தம் பண்டைய ஒளியைப் பெற்றன.

"சுருதித் துணையிற் றுதைகேள் வியருங்
கருதிப் புகலுங் கவிஞ வலரும்
பெருதிப் படியிற் பெயர்பைம் புனலிற்
பொருதிப் பியநற் புனிதஞ் செறிவார்.

செறிநற் கருமஞ் சிதையக் குறைகள்
உறிநற் புனலுற் றிடுகா விரியின்
மறியக் குடையின் மலிபூ ரணமாம்
பறியப் பவமும் படிவார் புவியோர்.

துறுபத் திரமுற் றிடுகா விரிசொல்
உறுபத் திமையா லுணர்வா ரெவர்முன்
அறுபத் தறுகோ டியதா யுறையும்
பெறுபற் றுளதீர்த் தமெலாம் பிறழ.

பாபஞ் செறிபா தகரா டிடலால்
தூபம் பொலிசா யல்துலங் கிமிகத்
தாபந் தணியா வகைதன் மனமுஞ்
சோபங் கொளமெய்ச் சுடர்நீங் கியதால்.''

தீர்த்தங்களாகிய நீங்கள் உங்களைப்பற்றிய பாவத்தைப் போக்கிக்கொள்ள வேண்டுமானால், காவிரிநதியிற்புகுந்து நீராடவேண்டும். அவ்வாறு நீராடாதவன் எந்தப் புண்ணியம் செய்தானாயினும் அதனால் பயன் இல்லை. மேலும், காவிரியில் தேவர்கட்கும் பிதிரர்கட்கும் உரிய கடன்களைச் செய்யவேண்டும். பின்னர், காவிரியின் சிறப்பினைப் பிறர் கூறக் கேட்கவேண்டும். அவ்வாறு கேட்கப்பெறாதவன் பாவிகட்குள் பெரிய பாவியாவான். இவ்வாறு பிரமன் மாயூரநகரின் பெருமையையும், காவிரிநதியின் இடபகட்டச் சிறப்பையும் ஏனைய நதிகட்கு எடுத்துக்கூறி விளக்கினார்.

"கிருதயுகத் தணங்குருவாய்த் திரேதத் தன்னக் கேசரமாய் துவாபரத்திற் கலியு கத்தில், துருதமுடன் கீழ்செல்குளிர்த் தோய மாகித் தூக்கருணை னுறுகாலத் தாண்டுதோறுங், கருதரிய பவம்போக்கும் பொருட்டு நீங்கள் காவிரி யாற் றினிற்படிவி ரக்கா வேரி, விருத பவ சமுகத்தை வென்று போக்கும் விரும்புமக்கும் மாவிடர்க்கும் விரைவி லம்மா.

கடலகமன் டலத்தொருவன் தவுலித் திங்கட் காலத்திற் கவுரிமா யூர மேகி, சடலமகிழ்ந் திடச்சய்ய நதிச்ச லத்திற் ருனுடி லவன்வரியன் சாற்றி னர்க்குள், விடலரிய சகலதலங் களுக்கு லீசன் விரும்பியமா யூரமென விழும மெய்தி, மடலவிழ்மா மலர்செறியுஞ் சகல தீர்த்த மானதியோ டையிற்பொன்னி மாமை மேவும்.

புனிதமிகும் புண்ணியபூ மிக்குண் மேன்மை பொருந்தியகா விரிக்கரையிற் புணரி யுண்டு, தனிதமங் குல் படிந்துமழை பொழியுஞ் சோலைத் தருக்கள் பலங் களைத்தருமங் கலவளஞ்சார்ந், தினிதருளுங் கவுரிமா யூர மென்றங் கிருந்தபதி யெவற்றினுக்கு மேலா மப் பாற், கனிதருமன் பாலடைந்து காவி ரிக்கண் கலந் தாடித் திலோதகபிண் டங்க ளிவாய்.

கோடகமா மகுடமுடி யரச னுகக் குவலையத்துற் பவித்துக்கா விரிகு டைந்து, வாடகமா திகடான மளித்தங் கின்ப மனுப வித்துத் தேகாந்தத் தமல வாய்மை, சேடகள நிரஞ்சனதிவ் வியவா னந்த சிவ சாதி யத்துவிதச் சிறப்பு வாய்ந்த, விடகத்தில் வீற் றிருப்பன் ஐய மில்லை மெய்மையிது வென்றுரைத் தான் விமலன் மாதோ.''

## தீர்த்தங்கள் தேசடைந்த அத்தியாயம்

உலகிலுள்ள தலங்களுள் மிக்க சிறப்புடையது மாயூரம் என்னும் தலம். அத்தலத்திடை ஓடும் காவிரி நதியில் நீராடினல் ஆடுபவர்களின் காமாதி முதலிய பாபங்கள் நீங்கும். பிறவிகளுட் சிறந்தது மானுடப் பிறவி. அத்தகைய பிறவியெடுத்தோர் மாயூரம் சென்று துலாக்காவிரியாடவேண்டும். காவிரியில் நீராடாதவன் இருப்பதும் இறப்பதும் ஒன்றே. காவிரிநதியில் நீராடி னேரை யமன் வாதனை செய்யமாட்டான். அவர்கட்கு மறுபிறவியும் கிட்டாது. அவர்கள் அடைவது முத்தி யுலகமேயாம்.

''உழுவலுளத் தொடுதுலையி லுதைய னேகு முறைக் கொருமாத் திரைமுன்ன யுற்று சோம்பல், முழுவதுமற்

றெருநானத்திங்கண் முற்று முதன்மைபெறுங் காவிரி யாற் றெவ்வி டத்தும், வழுவறமஞ் சனம்புரியிற் றீர்த் தங் கோடி மன்னறுபத் தாறுடும் பலன்வந் தெய்துந், தழுவியிப்பான் மையிலாடப் பாவி யோரைச் சமன்றூ தர் கொடுவினைகள் தான்செய் வாரால்.

அறவியற்கை யார்பாவ மறுநி மித்த மச்சமுள் ளோர் காவிரியி லாட வேண்டும், பிறவியிற விகளி ரண்டும் விருதாவாகும் பெட்புளத்தோ டிந்நதிசென் ருடா தார்க்கு, மறவியற வித்துறையெவ் விடத்தி லேனு மஞ்சனஞ்செய் தாற்புவியின் வந்து தோன் றித், திறவியன்மா தர்மருமக் கொங்கை யூறுந் தீம்பா லுண் டுவப்பதில்லை திடமி தம்மா.''

காவிரியில் எல்லாத் தீர்த்தங்களும் துலாமாதத்தில் வந்து நீராடித் தங்களைப்பற்றிய பாபங்கள் நீங்கப் பெற்று, புத்தொளி பெறுகின்றன. துலாமாதத்தில் காவிரிநதியிலாடுவோர் யமவாதனை அடையமாட்டார். பிறவிப்பிணி நீங்குவார். வினைப்பிறவி அவர்களைச் சாராது. சாத்திர தோத்திர புராணங்கள் கூறும்பேறு இதுவே. இத்தகைய நிலையை நோக்கினுல் காவிரி யின் பெருமையை ஒருவராலும் எடுத்துச்சொல்ல இயலாது.

"குலவலங்க லணியாடை மனது ரூபங் குதுகமுற நிருமலமாங் கோள்கை மேவி, யுலவியவக் காலமுத லுலகங் காக்கு முத்தமமன் னவருடந் தொறுந்து லாத் திற், கலவியசெங் கதிர்புகுநா ளர்த்தமெல்லாஞ் சுத்தி பெறத் துளைந்தாடித் தொழுதி றைஞ்சிக், கலவலுடன் செலுமதனுற் றீர்த்த சாரக் காவிரியி னுடமனங் காத லித்தே.''

காவிரி ஒழிந்த ஏனைய தீர்த்தங்கள் காவிரிநதியிலாடிப் புனிதத்தன்மை பெற்றுச் செல்லுகின்றன.

சாராங்கிசம் கூறியது

வியாதமுனிவர் தன்பாலடைந்த முனிவர்கட்குக் காவிரியின் தோற்றத்தையும் அக்காவிரி ஆடுதலால் ஆடுவோரால் அடையப்பெறும் மேன்மைகளையும் எடுத்துக் கூறுகின்ருர். காவிரியன்னை மலர்களாகிய கவரிகள் வீசத் தன்னை அடைந்தோர்களது பாவங்களைப் போக்கித் தலைமைபெற்று நிலத்திடை வருகின்ருள். எல்லாவகைப் புண்ணியங்களையும் ஆடுவோருக்குத் தருபவள் காவிரி. தன்பால் அடைவோர் எழுவகைப் பிறவியினும் செய்த பாவங்களைச் சாம்பராக்கிவிடுவாள். மேலும், மக்களுக்கெல்லாம் தான் அன்னையாக விளங்கி, அவர்களது அரிய பாவத்தையும் போக்குவாள். கோடிகோடி யாகஞ்செய்து பெறும் பயனைக் காட்டிலும் மேலான புண்ணியம் காவிரிநீராடுவதால் ஒருவன் இப்பிறவியில் அடைகின்ருன்.

படைகளால் நாடு அடையும் துன்பம், பிணி, மூப்பு, உடல் தளர்வு, இறப்பு, பிறப்பு, மிருகம், இடி, மின்னல், காற்று ஆகியவைகளால் ஒருவருக்கு ஏற்படும் பயமாகிய அனைத்தையும் காவிரிநதி ஆடுவதால் நசித்துப்போகுமாறு செய்துவிடலாம். மேலும், பிதுரர்கள் தமது இதயம் காவிரியாடுவதால் நிறைவடைவார்கள். செல்வம் ஆடுவோருக்குச் சேரும்.

"மோதுபடை யாலுலகு பாலன மயர்ந்த முடியரசனுனரைகொள் மூப்புடல் தளர்ந்து, கோதுபட மாளல் பிறவியி னுறுதல் பருவக் கொங்கையுறு தெய்விக

மதாற் குறுபிணியாற், காதுரக மிருகவகை யாலிடிகண் மின்னல் காற்றினல் உறுங்கவலே பெறுந்தவன மூன் ருல், ஓதுபய மானதெலாம் ஓடிநசித் திடுமா மோடி யகா விரிநதியி லாடியவொண் மையினுல்.

இவறுமனக் காரியங்க ளனைத்துமுறும் பிதிர்க்க ளியாவர்களு மிதயநிறை வெய்திடுவ ரறமுந், தவ றுளதா காதுதனங் கிருடிவிருத் திக்குஞ் சாசுவத மாய்க் குடும்பம் தழைவெய்தி யிடுமேல், சுவறலுறு மியாக்கை முடிவினி லமுதசித்தி தோயுமிதி லய்யமிலே யென்றரச ருள்ளங், கவறல்கொளக் கறையுமழுங் கணிச்சி பிடித் தோனைக் கான்முளையாய்ப் பெறுஞ்சமதக் கினியுமிகக் கரைந்தான்''

என்ற பாடல்களால் இதனை அறியலாம்.

மாயூரதலத்தை அடைந்து அங்கு வதியும் இறைவனை உளங்கொண்டு வழிபட்டு, ஐப்பசி மாதத்தில் சந்திரனும் சூரியனுங்கூடுகின்ற பரிசுத்தமான அமாவாசையில் சூரியன் உச்சியை அடையும் நடுப்பகலில் முனிவர்கள் பரிசுத்தராக வந்து நீராடுவார்கள். அவ்வமயம் அக்காவிரிநீராடுவதால் ஒருவர் அடையும் பயனை யாராலும் சொல்ல இயலாது என்று கூறி முடித்தார்.

"துலோதியி லிந்திரவி யிரண்டுங் கூடுந் தூயவமாவாசைதினந் தருண னுச்சி, நிலேமருவு நடுப்பகல்வந் தெய்துங் காலே நிகரின்முனி வரர்களிரு மலங்க ளாகி, அலேமறியும் புனற்றிர்த்த மளக்கிற் கோடி யறுபானு றினுக்குமரு டழைத்த சய்ய. மலேமகளா கியபொன்னித் தெரிச னத்தை வழங்கினளிப் பகலதிக வளம்பெற் ரேங்கும்."

இதினின்று முத்திப்பேறு அடைய விரும்புவோர் நடுப்பகலில் காவிரிநதியில் ஆடவேண்டும் என்னும் சமய உண்மை நமக்குப் புலனுகின்றது.

## பசாசு கிளி பூனை வடிவகன்றது

பாரத்துவாசமுனிவர் யாத்திரை வருகிறபொழுது தோலெல்லாம் மிகச்சுருங்கி, கண்கள் பஞ்சடைந்து குழிவிழுந்த நிலையிலுள்ள ஒரு பேயைக் கண்டார். அதன் உண்மைநிலையை உணர்ந்தார். மனம் இரங்கினுர். நீ முன் பிறவியில் ஏற்ற புண்ணியங்கள் செய்யாமையால் இப்பொழுது இந்நிலை அடைந்தாய்; நீ பழம் பிறவியில் விதர்ப்பநாட்டை ஆளும் அரசனுக விளங்கினுய். பின் பாவங்கட்கு ஏற்பப் பைசாசமாகியும், புழு பூச்சி பறவைகளாகியும், பூனையாகியும் முடிவில் கிளியாகியும் பிறவி எடுத்துள்ளாய். இவைகள் உன்னைவிட்டு நீங்கவேண்டுமானுல் நீ பொன்னிநதியாடவேண்டும். அதுவே உனக்கு உய்யும் வழியாகும். அந்நதிக்கு ஈடாக வேறு எந்நதியும் இந்த உலகிலில்லை என்று கூறினுர்.

பாரத்துவாசர் கூறியவாறு பேயும் காவிரிநீராடித் தன்னைப்பற்றிய பாவங்கள் நீங்கப்பெற்று முடிவில் முத்தியையும் பெற்றுப் பொன்னுட்டை அடைந்தது. இவ்வரலாற்றை,

"மான்றலை மாற்றுந் தூக்கின் மார்த்தாண்டன் மருவுங் காலை, மான்றகா விரியைச் சேர்வி ரன்னதி காள கூடப், போன்றபா வச்ச மூகம் போக்குமுங் களுக்கு மெய்மை, ஈன்றதா யனைய வன்பா லினிதரு ளின்ன திக்கண்.

தவித்திரங் காத சுத்தந் தணக்கவந் தாடி ஞேர்கள்
பவித்திர ராகிப் புத்தே ளுலகடை குவர்கள் பண்பார்
பவித்திரத் துருவ வேத மாமிது புகறின் மொக்குள்
கவித்திர தங்கொ ழிக்குங் காவிரி நதிக்கீ டில்லை.

மிடையளி குடையுங் கஞ்ச விரிமல ரலங்கும் பொன்னி
விடையபோ கங்கொ டுக்கும் விரளவெம் பவந்து டைக்
அடையநன் முத்தி யியு மறைந்திடி லிதற்கீ டாக [கும்
உடையவல் லபம ளிக்க வொன்றிலை யுலகி னம்மா.

கன்னலோங் கணையிற் பொங்குங் காவிரி மகிமை யன்பாற், பன்னலுங் கேள்வி செய்து பரத்துவா சனைப்ப ணிந்து, நன்னய மொழியான் மெச்சி நவிலு மந் நதியை நாடி, சென்னடை யால்வி ரைந்து சென் றரு ளுதை யத்தில்.

உசத்தியன் மைந்த ளுேது முரைப்படி நான மாடி, யசத்திய மான பாவ மனைத்தையு மகற்றித் தந்தன், வசத்தியங் கியவொண் டேகம் வாய்த்தமா திரத்தை யொத்த, குசத்தியர் சூழும் பொன்று டடைந்தனர் குதுகங் கொண்டே.''

## சற்பவடிவு அகன்றது

நகுஷன் அகத்தியமுனிவரின் சாபத்தால் சர்ப்ப வடிவமானுன். அந்த வடிவுடன் அவன் பல காலம் உழன்று பூவுலகில்கிடந்து துன்பப்பட்டான். முடிவில் மாயூரதலத்தை அடைந்து துலாமாதத்தில் காவிரியில் நீராடினுன். அதுகாரணமாகச் சாபம் நீங்கப்பெற்று, நற்கதியடைந்தான். இரவலர்க்குப் பொருள் கொடுப் பதாகச் சொல்லிப் பின் அதனைக் கொடுக்க மறுத்த காரணத்தால் ஒருவன் குரங்கானுன். வேருெருவருக் குச்சொந்தமான தோட்டத்தில் பழங்களைத் திருடிய

ஒருவன் நரியானுன். இவ்விருவர் சாபமும் காசியப முனிவர் உபதேசத்தினுல் மாயூரத்தில் வந்து துலா நீராடியபின், பாபம் நீங்கப்பெற்று முடிவில் நற்கதி அடைந்தார்கள்.

"ஆசிபணித் தருள்கருணை மிக்கு மேதை யன் பணைந்து கடிந்தோருக் கதிக ளுகி, வாசிபடச் செய்த சத மகத்தோ ளுதி வகுத்தசரா சரம்படைத்த வலிய திரத், தூசிபத்தைத் தூண்டியவா துவனின் மாழ்கல் சூழ்புலனை ந் தையுமுரனுற் ரெடர்ந்து ஞேக்குங், காசி பமா முனியெமக்குப் பிராயச் சித்தங் கரையெனவம் முனிகரைந்தான் காத லாலே.

காசார மிகுகவுரி மாயூ ரத்திற் கதிர்சூகங் கலந்திடு ளுட் காலம் பார்த்துத், தேசார மணிசொரியுஞ் சங்கின் கொள்ளை சென்றுலவுங் காவிரிசென் ருடி மாந்தர், ஆசார மேனிபெற்றுத் துலையின் மேன்மை யறிந்தாடு வீர்களென வறவன் பாதப், பூசாரம் பொழிகமலங் களைவணங்கிப் பூரிமா யுவுமரியும் பொருக்கென் றேகி.

மலங்கா ரணம்பிறப்புக் கென்ரு ராய்ந்து வந் தாடினேர் மறலி வனையுந் துன்பாற், கலங்காரந் தர வுலகிற் றேவ ராகிக் களிப்பரென வரைபூங்கா வேரி யாடி, அலங்கார மானுடரூ பத்தை யுற்றங் காடியதின் வைபவமு மறிந்து பின்னர், இலங்கார மணிமகுட மணி யிலேக ரெழின்வடிவுற் றிருவருமும் பரை யியைந் தார்.

எண்டிசையுள் ளோரறியப் பொன்னி யாற்றி லெப்பொழுதில் விழுந்தந்தப் பொழுதில் முன்னந், தண்டிகைநின் றிழிந்துபயங் கரமா யோங்குஞ் சற்ப வடி வகன்றுதிவ் வியதே கத்தை, கண்டிகை நூபுரங் கடக மகுட மின்னக் கவின்கொ ளக்கொண் டுவணை

சென்றுன் கவலை யற்று, குண்டிகைமா தவர்முதலோர்
கூறுஞ்சாபக் கொடியபவ மறுமெய்மை குலவியாடில்.''

## கந்தருவ கயமோசனம்

மகாசாந்தா என்பவன் முனிவர் ஒருவரின் சாபத்தினல் யானை உருவம்பெற்றுக் காட்டில் அலைந்து கொண்டிருந்தான். நாரதர் யானை வடிவில் இருந்த அவனைக் கண்டு மாயூரதலப் பெருமையையும், அங்கு உள்ள காவிரிநதியின் சிறப்பையும் இடபகட்டத்தின் பெருமையையும் கூறித் துலாமாதத்தில் அங்கு சென்று நீராடுமாறு பணித்தார். யானைவடிவிலிருந்த மகாசாந்தாவும் அவ்வாறே புனிதப் பொன்னிநீராடி, யானை வடிவு நீங்கப்பெற்று முத்தியடைந்தான். இவ்வாறே திலிபனிடம் இருந்த இருகுதிரைகளும் காவிரிநதியில் ஆடிப் பாபம் நீங்கப்பெற்று முத்தியடைந்தன.

இவ்வரலாற்றில் இருந்து காவிரிநதியின் பெருமையும், அதில் நீராடுவோர் அடையும் பயன்களும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

'' கரிவடி வடைந்து முக்கும் கடுஞ்சாப மொழிப்ப
னேமி, அரிபத்த ரெனக்கு நண்ப ராகையாற் சய்யச்
சாரல், சொரியரு வியொடெ ழுந்த தூயதீர்த் தங்க
ளோடும், பரிவுட னடைந்த பொன்னிப் பாய்நதி யுண்
டிப் பாரில்.

சுசிதருந் துலையிற் சூரன் றுன்னுறு ளுளத்திற் சுத்தங்
கசிவுவைத் திக்கா வேரி கண்டுதாழ்ந் தருச்சித் தாடிற்
சசியெனக் கொம்பி ரண்டு தாங்கிய வடிவு நீங்கிப்
பிசியறி புலமை பெற்ற பிராமண ருகு வாய்நீ.

பொய்யகற் றியகா வேரிப் புனல்குடைந் தொருவ னுடின், மெய்யகப் பட்ட முத்திக் கருகவிப் பிரராய்த் தோன்றித், துய்யகை வலத்திற் ரேய்வன் ரேய்ந்தறி யென்று கஞ்சக், கையகத் திருந்த வீணை முனிகசிந் துரைத்தா னன்றே.

அரிணங்கண் மயிலஞ் சாய லலர்காந்த ளங்கை கொண்ட, கிரிணந்த னைப்பெண் டோற்றுங் கிரித்தட முலவிக் காலம், பரிணத மாகச்சாப வெல்லையும் படரப் பாய்வெங், கரிணங்கா விரியின் மூழ்கிக் கயரூபங் கழித்த தன்றே.

வணருறு வாரி சூழ்ந்த வையகத் தெவரு மெச்ச, வுணருமா மறையோ னுகி யுற்றிடற் குரிய முத்தி, இணருறு பொன்னி யோணத் திறங்கியா டியதி றத் தாற், புணருறச் சிவத்து வத்தைப் பொருந்தியின் புற்றதன்றே.''

இது முதல் திலீபனுக்கு வசிட்டர் காவிரியின் பெருமையைக் கூறி, அதில் சென்று இக்குதிரையுடன் நீராடுக என்று பணித்தார். அவ்வாறு ஆடுவதே முத்தி அடைவதற்குரிய வழியுமாகும் என்றூர்.

“அலிபனை ந் தாம னன்ன வாண்மையா னரசாள் வாரைக், கிலிபரின் றன்மை வாய்த்துக் கெழுமச்செய் வீர முள்ளான், பலிபலந் தருவ தேபோற் பகுத்திடுங் கொடையான் பண்பார், திலீபனென் ஞெருபே ருள் ளான் மனுவெனத் திதியின் மிக்கான்.

விச்சுவம் புரக்குந் திண்டோள் விறலுடைத் திலீப னுக்கு, மெச்சுவங் கூழ்வி துப்பின் விஞ்சியே கசப்பப் பச்சை, நச்சுவண் ணஞ்செ றிந்தா யிரம்பத்தா னையி னலங்கொ, ளச்சுவ மிரண்டுண் டன்ன தாண்மையா ரறைய வல்லார்.''

வசிட்டர்கூறியவை :

"கருணையோ டன்பு கொண்ட காவலோய் பரிக ளுக்கு
மருணயக் கடனெ ழிக்கு மதியுபா யமும னத்திற்
கிருணையுங் கிளர நின்ற கிழமையாற் கிடைத்தங் காடத்
தருணையா கியகா வேரி கடனனைத் தையுஞ்ச வட்டும்.

மிடந்ததிர்த் தங்க ளோடும் விண்ணிழி கங்கை யாளும், மிடைந்துபா வங்க ளேக விதையத்திச் சித்து வல்லை, குடைந்திடப் பொன்னி யாற்றிற் கோன்மதி குறுகுங் காலம், அடைந்திடு மருட ழைத்தங் கவனியா ளரச ரேறே."

## சிம்மத்துவசன் வரலாறு

சிம்மத்துவசன் எனும் அரசன் தன் பரிவாரங்களுடன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். அங்கே பாரத்துவாச முனிவர் தவஞ்செய்துகொண்டிருந்தார். வேட்டையாடித் திரும்பியபோது மன்னன் முனிவரை அறியாமல் காலால் உதைத்துவிட்டான். முனிவரின் நிட்டை கலைந்தது. முனிவர் மன்னனைக் கழுதையாகப் போகுமாறு சாபம் கொடுத்தார். உடனே மன்னன் கழுதையானன். நல்லோர்கள் வீட்டில் கொள்ளை அடித்த வேடன் ஒருவன் மறு பிறவியில் கழுகாகப் பிறந்து துன்பப்பட்டான். எதிர்பாராமல் கழுதையும் கழுகும் மாயூரதலத்தில் ஒன்றை ஒன்று சந்தித்தன. தங்களுடைய முன்னைப் பிறவியை எண்ணித் துன்பப் பட்டன.

இவ்விரண்டும் இவ்வாறு துன்புறுங்கால் நீங்கள் இருவரும் துலாக்காவிரியில் சென்று ஆடினல் உங்களைப் பற்றிய எல்லாப் பாபங்களும் நீங்கிவிடும் என்று

விண்ணிடை அசரீரி எழுந்தது. உடனே அக்கழுகும் கழுதையும் காவிரிநீராடிப் பாபம் நீங்கப்பெற்றுப் பண்டைய உருவத்தை அடைந்து முடிவில் முத்தியும் பெற்றன.

"மாயிட்டும தேசத்தைப் புரந்திடு மன்னர்மன்னன், தியிட்ட முடையன் சிங்கத் துவசன்என் றெவரும் பேச, தாயிட்ட பேரை யுள்ளான் சக்கிர வர்த்தி யாகி, தூயிட் டிமைமில்லாது தொன்னிலங் காவல் பூண்டான்.

இடக்கை யாதிகளியம்ப வெதிர்க்கும்புண் டரிகம் பல்லம், விடக்கையுண் மடங்க லாதி வீட்டிவெவ் வேட்டையாடி, குடக்கையுங் குணக்கையுங்கூ றிட்டிடை யென்றூழ்கூட, தடக்கையால் வலிபடைத்த தலைவனக் கானை நீங்க.

சிரத்துவாசக் கடுக்கைச்செஞ்சடைச் சிவன் மாயூ ரப், புரத்து வாசஞ்செய் பொன்னிப் புனலினும் புனித மேவும், பரத்துவா சன்மெய் திண்டப் பதங்களாற் ருக்க நோக்கி, யுரத்துவா சகத்தாற் சாபமுரைத்தனன் மிகவுசற்றி.

நிட்டைபெற் றிருந்த வென்னை நிகரம் பொற் கானினீட்டி, வட்டைசென் றரந்தை மேவும் மலரடி யாலுதைத்தா, யெட்டையா னிலம்பரப்ப தில்லையிக் கருமத்தாழ்வாற், சட்டைபட் டியவித்தேகந் தணந்து வேசரி யாவாயால்.

செறிந்திக்கா விரியினனந் தினகரன் துலையுறுங் கா, லறிந்ததி லாடுவாய்நீ யான்றவிவ் வுகத்தி லித் தைப், பிறிந்துநற் கதிகொடுத்தல் பேசிலிங் கில்லைத் தெவ்வை, யெறிந்திடுஞ் சுடர்வே லேந்தி யிருநிலம் புரந்த வேந்தே."

## சுதரிசன் கயிலைசென்றது

வசிட்ட முனிவர் இராமனுக்குச் சுதரிசன் என்ற அந்தணன் வரலாற்றைப் பின்வருமாறு கூறுகின்றார். சுதரிசன் தன் குலவொழுக்கத்தைவிட்டு நடந்ததனால் பிராமணனுக்கு இயல்பாக உரிய ஒழுக்கத்தை இழந்து கெட்டநடத்தை உடையவனானான். அதனால் பல ஆண்டுகாலம் துன்பப்பட்டான். எதிர்பாராமல் மாயூர தலத்தை அடைந்தான். காவிரிநதியைக் கண்டான். துலாமாத விசேடத்தைப் பிறர்சொல்லக் கேட்டான். முறைப்படி காவிரிநதியில் துலாநீராடினான். அதனால் தன்னைப்பற்றிய பாபங்கள் யாவும் அறவே நீங்கப்பெற்றான். முடிவில் இறைவன் உறையும் கயிலையையும் அடைந்தான்.

*"சதரிசனத் தருக்கிறும்பூ தளிக்குமன்னன் சவை யணுகி யிந்திரியச் சமுதயத்தா, லதரிசன மாகிய விகற் பக் காட்சி யகன்றுளத்தோ டம்பகங்கள் மதர்க்க வந்த, சுதரிசனன் அவைவியப்பப் புரியுந்தோகைச் சுந்தர னட் டியவகை தொட் டிமையானடி, நிதரிசனஞ் செய் தவள்பா னெஞ்சம் வைத்து நிகிலநிய மச்செயலும் நீங்கினால்.*

*சரதனெறி யொருவியணி யேந்திச் சென்று சரணி யா தங்கள் சத்த சுரங்க ளொன்பா, னிரதநய நஞ் செறி பார்வைகளோ டங்கை யெடுத்தபி நயிக்குமுறை யிறையுநிங்காப், பரதநடஞ்செய்த பரத்தையின் வசத் தாற் பஞ்சபாணன் பகைமேற் கொண்டிணைந்து, சுரத சுகத் தாசைவைத்துக் கல்வி கேள்வித் தூயசத் துவங் களையும் துறந்து ணைங்கி.*

அதினுலாத் மாவைத னுலாராய்ந்து அறநெறி செல் சத்தியற்று வய்யன் றேடும், பதினு யிரம்பொ னிட்க மெழிற்கிராம பதார்த்தவகையா லுவகை யவட் குப் பண்ணி, மதினுட லாய்விதிபோற் பரத்தையங்க மகிழ்ந்த ணைந்தான் குலிஃனயாய் மலர்மா மாதுந், துதிநாரி யானதுணை வியைத்துறந்து தூர்த்தனுய் வருடமைந்து தொலைந்த பின்னர்.

ஆருன வற்சரத்திற் றேசந் தோறு மடைந்து சுழன் றும்மைகளி னுற்றறத்தாற், கோருதை வன்புகு நாள் புலரிக் காலங் குதுகமுற்றுங் கொடுக்குங்கா வேரி யாற்றில், பேருன தனைத்துமுற மாந்தராடும் பெற்றி யெல்லாங் கண்டகத்திற் பிரியத் தோடும், தேருனு கிலு நோக்கும் பாவ கத்தாற் றினமுமத்திங் களினுனஞ் செய்தா னன்றே.

துலைத்திங்கள் முடிவளவும் பொன்னி தோய்ந்த சுதரிசனன் சென்றுலகந் தரத் திறத்தா, னலைத்திழுக் கும் பாசங்கை கொண்ட கோர வந்தகன்றூ தர்க ளப்போ தவனைக் கூவி, மலைத்திடுமா மறலிநக ரடை வித்தார்கள் வழங்களவின் மணிப் பணியோ டுவகை கூரக்,கலைத்திங்க டனைச்சடையின் முடித்தோன் வாழுங் கயிலைநந்தி யேவலினுற் கணங்க ளானுர்.''

## அரம்பைக்குக் கல்லுருவும், இராமனுக்குப் பிரமகத்தியும் நீங்கிய வரலாறு

இராமன் வேதங்களில் கூறியவாறு வேள்விகள் பல செய்தான். அவ்வாறு செய்தும் அவனைப் பற்றிய பிரமகத்தி நீங்கியபாடில்லை. பின்னர், மாயூரதலம் அடைந்து துலாநீராடித் தன்னைப்பற்றிய பிரமகத்தி

நீங்கப்பெற்றான். விசுவாமித்திர முனிவரின் சாபத்தால் தேவமாதாவாகிய அரம்பை கல்லுருவம் அடைந்தாள். காவிரிதீர்த்தம் அக்கல்லின்மீது பட்டதால் சாபநீக்கம் பெற்றுப் பெண்ணுருவம் அடைந்தாள். இவ்விரு வரலாற்றிலிருந்தும் புனிதக்காவிரிநீர் வேண்டுவதை ஈயும் தனித்த சிறப்பினையுடையது என்பதனை ஒருவாறு உணரலாம்.

## தாய் தந்தை அழைத்தது

அவந்திநகரத்தில் கௌசிகர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் இறைவனைக் குறித்து வேள்வி செய்தார். அசுரர் இருவர் கௌசிகர் செய்யும் வேள்வியைக் கண்ணுற்றார்கள். கௌசிகர்மேல் அசுரர்கள் கோபங்கொண்டு அவரையும் அவரது அன்புமனையாள் ஒகவதியாரையும் கொன்றார்கள். பின்பு அவ்வசுரர் அவரது மகனையும்பற்றிக் கடலில் எறிந்துவிட்டார்கள். கௌசிகரின் மகன் கடலில் சென்ற செம்படவர்கள் கையில் அகப்பட்டான். செம்படவர்கள் அந்தக் குழந்தையை விசுவகுப்தன் என்ற வைசியரிடம் கொண்டு சேர்த்தார்கள். அவ்வைசியன் அக்குழந்தையை விஷ்ணுகுப்தன் என்று பெயரிட்டு வளர்த்தான். கல்வியையும் உரிய வயதில் கற்கச்செய்தான்.

விஷ்ணுகுப்தன் தனது வரலாற்றை உரோமச முனிவர் கூற அறிந்தான். தன்னுடைய பெற்றோர்களைக் கண்டு வழிபட எண்ணினான். மாயூரநகரையடைந்து முறையாகத் துலாநீராடினான். காவிரியில் நீராடிய புண்ணியத்தால் அவன் எல்லாவகை நலங்களையும் பெற்றான். முடிவில் தன் பெற்றோர்களையும் தேவ உருவில் காணும் பேறுபெற்றான்.

"இரங்கல்நீ பொறுத்தல் செய்வா யான்செயு மிருந்த வத்தாற், குரங்கல்செய் தென்றுய் தந்தைக் குரவர்முன் வரனுன் காண்ப, னுரங்கலந் திடுமுள் ளத்தி லுசாவியிவ் வாறு ரைத்து, இரங்கலன் சோகத் தோடு சென்றனன் தபோவ னத்தே.

வரோதயப் புலமை யுற்ற மாதவ னண்ப னன்பாற், சரோருகத் திருந்த மேலோன் றனையதி சயித்தி ருந்த, உரோமச னவ்வ னத்தி லுற்றதை விழியா னேக்கி, திரோகித வவித்தை சிந்தச் சென்றடி வணக்கஞ் செய்தே.

அலங்கறத் தலங்க டன்னி லதிகநற் றலத்தீர்த் தத்திற், சலங்கதி கொண்டு செல்லுந் தரங்கிணிக் குழவி னெல்லாப், பலங்களும் பகுத்து மோக்கப் பரக திப் பான்மை யீயு, நலங்கதித் திருக்கும் பொன்னி நளி களு நவிலக் கேட்டு.

நமநிய மத்தை நாடி நடக்குரு துவணை யுய்க்குங், கமனியப் பொன்னி யாற்றின் கரையடைந் ததிற்புக் காடி, தமனிய தான மாற்றிச் சார்ந்துள நிரும லத்தை, தெமனிய மத்தைப் பூண்டு தீர்ந்தனன் செல்ல லெல் லாம்.

மல்லரி யருளாற் றந்தை மாதாவிவ் விருவருந் தான், சில்லரிக் கண்ணு நிற்குந் தெரிசனங் கொடுப்ப ரொல்லே, வெல்லரி தாகுந் தீய வினைகளும் விலகு மென்று, சல்லரி முழக்க மென்னச் சாற்றின தும்பர் வாணி.

தானவ ராலி றந்த தந்தைதாய் களைமுன் காண, ஞனவாச் செறிந்தே னேற்கு நல்லவர் களை நீ யென்று, மானவர் மதிக்குஞ் செல்வி வரத்தினை வினவுங் காலே, வானவர் முதுவ ஞதி வானவர் கணங்கள் வாழ்த்த.

தனுவலம் புரிதன் டாழி சந்திர காச மேந்து, மனுவல மனையு மாய னடைந்தன்பன் றனக்கெல் லாமாய்ப், பனுவலுற் றிடும பிட்டப் பலன்களும் படுத் துப் பின்னர், மனுவல மறைப யின்ற குரவரை வரவ ழைத்தார்.

தந்தைதா யிருவர் வந்தார் தனையனு மவரோ டேய்ந்தான், முந்தைநாள் வாலி யத்தில் முகுந்தநண் பனைவ ளர்த்த, விந்தைசேர் விசுவ குத்தன் விழைந் துற விட்டை யீய்ந்து, சிந்தையில் விழைந்த தைத்தன் சிலதனுக் கருளிப் பின்னர்.

குரவரோ டனேக காலங் கூடினு றெல்லை தீய
கரவரு மில்ல றத்தைக் காதலித் தனேக வேள்வி
யரவவா பரண னுதி யனைவரு மகிழ வாற்றி
விரவனைத் தான சங்க விகாரமும் விட்டொ ழிந்தே.

சகளமுங் கடந்து மாயோ னருளினுற் சார்ந்த பாச
நிகளமு நெரித்துத் தள்ளி நிகழ்த்தமே னிலவி னின்ற
வுகளமே னியையு நீங்கி வுரைத்திட நான்கா யுற்ற
வகளமு மகன்ற மோக்கமகங்களித் தடைந்தா னன்றே''

இதிலிருந்து தாய்தந்தையராம் இருமுதுகுரவரை ஒருவன் நியமம் தவறுது வழிபட்டுவருவானேயானுல் அவன் இம்மையிலும் அம்மையிலும் செம்மைபெற வாழ்வான் என்னும் சீர்மை புலனுகின்றது.

## மித்திரன் மணமும், பசாசு மோட்சமும் கூறியது

அங்நாட்டில் விசாகன் என்ற ஒரு மன்னன் இருந்தான். அரசனுயினும் தன் மனத்தைக் கந்தர்வப் பெண்ணுக்கு ஆட்படுத்தினுன். அதனுல் மிக்ககாமாந்த காரனுயினுன். விசாகன் சிவநிந்தையால் அகத்தியரின்

சாபத்தை ஏற்றுப் பைசாச உருவம் அடைந்தான். கந்தர்வப்பெண்ணோ மித்திரன் எனும் பிரமசாரியை ஆலிங்கனம் செய்யவந்தாள். அதுகாரணமாக அவள் பைசாச உருவமடையுமாறு சபிக்கப்பட்டாள். பின், துலாநீராடிப் பைசாச உருவம் நீங்கப்பெற்று, பேறு பெற்றாள். விசாகனையும் அகத்தியமுனிவர் காவிரியாடு மாறு பணித்தார். அவனும் அவ்வாறே காவிரியாடி நற்பேறுபெற்றான்.

"சகலவிட் டபங்களுக்குந் தலைவனு மிறைவன் றன்னை, யகலவிட் டவனைநிந்தை யறைசிவத் துரோ கத்தாலே, சுகலமன் னவனுந்திய சுவப்பிர மங்க டுன்னி, இகலற வுகமோர் பத்தா யிரம்பொசித் திறுதி யின்கண்.

இலகைமா மணியிலங்கு மெழின்முடி புனைந்திங் கெல்லா, வுலகையோர் குடைநிழற்கீழ் உறவாண்ட விசாகமன்னன், பலகைமா வுலவும் விந்தப் பருப் பதச் சாரலின்வா, யலகையாய்த் திரிந்தான் காரியா னையா லறல் காணாதே.

பழூதுற்ற நரகி னின்றும் பாரிடை யடைந்த போதுங், கழுதுற் பத்தியைக் கிடைத்துக் கலங்கிவாய் வெருவி வாயா, லழுதுயங் கினனிப் பாவ மோசன மாதற் கேது, முழுதுமெந் தனுக்கிப் போது மொழி யென முனிவன் சொல்வான்.

உவம மற்றிடும் துலாக்கா வேரியை யுசாவிச் சேர்வாய் சிவமணை ந் திடுமச்சிந்தாற் சிறந்தமுத் தியுனிற் குண்டு வவமன்னே ரிடும்பசாசத் துவத்துனீ யஞ்சி யஞ்சி நவமதி யிடைவி சார நடத்தலை நலங்க ணல்கும்.

உளருஞ் சிகரக் காவேரி யூடாடு னைத் தாலே
தளரும் பைசாச மேனி தணந்திடும் தரும மெல்லாம்
வளருமற் றத் தீர்த்தங்கண் மருவிச்செய் மஞ்சனத்தாற்
கிளருமிப் பிசாச தேகங் கெடாதுனக் கிதங் கிட்டாதே.

முந்தரு வானலத்தின் முடுகுத ரத்தீ மண்ட [பத்
வந்தரு வருத்தி தாங்க வரும்பொறை யுயிர்க்குத் துன்
தந்தரு வருப்புற்ருனி சாற்றக்கேண் முக்கா லத்திற்
கந்தரு வன்கிடைத்த காரிகை மகளொ ருத்தி.

பாங்கியோ டவளொ ருக்காற் பார்வள மறியவேண்டி
யோங்கிய மானத் தேறி யும்பரா ருக வோகை
தாங்கிய மனத்தோ டெங்குஞ் சஞ்சரித் தனளக் காலை
தேங்கிய விந்து னுமச் சிறந்தசா கரதீர்த்தத்தில்.

சித்திரந் தருணங் காந்தி செறிநவன் பிரமசாரி [லன்
பத்திர மறையோ ரானைப் பழிச்சுவோன் குசிக்குப்பா
மித்திர னெனப்பேர் பெற்ருன் மெய்நலம் விழைந்து
யத்திரங்களினுன்மார னடர்த்திடவசமழிந்தே. [னேக்கி

தந்துற விடையுஞ் செய்ய தாமரை விழியுந் திங்கள்
சிந்துர நுதலுங் கொண்ட சித்திரம் பெயரா ளொல்லை
விந்துசா கரத்தீர்த்தத்தில் விழைந்துறு மித்தி ரன்பால்
வந்தரு கடைந்து மெச்சி வகுத்தனள் மனம ருண்டே.

புலத்தை வென்று புணரியுண்டு பொதியின் வைகும் புண்ணிய னுள்ளுவந் தெடுத்துப் புதுமை யாக, வலத்த வண்ணங் காவேரி னைமாடி மன்னர் பிரான் மண்ணையுரு வல்லி செய்து, தலத்திலுயர் தானத்தைச் சார்ந்தான் றெய்வச் சடலமுற்றக் கணத் துவகை யுளந்த ழைத்து, குலத்துரிய வொழுக்கமற் ருேர்களுக்கு மிந்தக் குடிநைியன்றி யுற்றதுணை கூற யாதோ.”

ஆகவே குலவொழுக்கமுடையோர்கள் என்றும் அடைவது இன்பமே; அவ்வின்பத்தை அளிப்பது காவிரிநதியே என்று கூறுகின்றார்.

## சுவேதவதி கற்பேற்றியது

சுவேதவதி தன்குலமுறைப்படி அந்தணன் ஒருவனை மணந்து வாழ்க்கையைச் செவ்வனே நடத்திவந்தாள். கணவனோ அழகும் குணமும் உடைய அந்நங்கையை விரும்பி எண்ணாது, கணிகை ஒருத்தியை விரும்பி அவள்வசமானான். ஆயினும், அவ்வந்தணன் தன் மனையாளிடம் அறுசுவை உண்டிமுதலியன என்றும் உண்ணத் தவறுவது இல்லை.

"நீண்ட வியன் ஞாலத்திற் றவுலி நான நெஞ்சினயந்தவன் பவத்தோ டுறுஞ் சாபத்தை, கீண்டவியக் கெடுத்திடுவன் புராண மெய்மை கிளர்த்துபுரா விருத்தமெவர் களுக்குங் கிட்டா, மாண்டவியன் மரலியிவர் விருத்தாந்தத்தை வகுத்ததிதற் குதாரண மாக முன்னுள், பூண்டவியற் சுவேதவதி தன்னை வேட்டோன் பூசுரோத் தமன்கமனப் புயங்க னம்மா.

காம பாலனஞ் செய்தோன் வருண முன்னு விற்பவித்தோன் கடைவருணக் கணிகை மாதி, னேமபலந் தனை மகிழ்ந்தோ னிரவு மெல்லு மிப்பரத்தை யிடத்திருத்து மிதைய முள்ளான், சோமனுமப் பெயரான் இவற்குமாலை தொட்டணிவாழ்க் கைத்துணைவி சுசீலை சீல, நாமபங்க மிலாதவள்நன் னலம னைத்து நண்ணினு ணாமடம் பயிர்ப்பச்சத்தாள்.

சவேதமனு மந்திரங்கள் சாற்றி வாயாற் றக்க விரு பிறப்பாளர் சலிலமேந்தி, நிவேதனவர்க் கியங் கொடுக்க முடியா தாகி நின்றயர நீள்விசும்போர்

நேமி சூழ்ந்த, குவேதமறம் புரந்தோரே னேர்குறிக்கக் கொடிஞ்சித்தே ருதியனுதிக்காம லாற்றுஞ், சுவேதவதி யெனுநாமந் தொனிக்கநின்ற டுலாமதினு னத்தி லொருப்பட்ட தூயாள்.

இட்டநா யகியிவளு மிருக்க வேறு ரெழின்மருங் குற் பரத்தையிர தியின்பொ ருட்டு, நட்டடைந்தான் சுவேதவதிக் கொருக்கா லுந்தா னயந்தறியா னறு சுவையோ டுண்டி நாலு, மட்டளிக்க மனைவியிடத் துண்பான் றன்ன றைந்துவிட யமுங்களிக்க வமளி மேவி, மட்டவிள்குந் தளவரைவின் மாதோ டென்று மருவிநல மகிழ்ந்திடுவான் மகிழ்ந்த போதும்.''

அந்தணன் தன் உடம்பு முடமாகித் தனியே நடந்து செல்ல இயலாத நிலையிலிருந்தான். கற்பரசி யாகிய சுவேதவதி தன் கணவனுக்குகந்த பணிவிடை களைத் தவறாது செய்துவந்தாள்.

அந்தணன் இந்நிலையிலிருந்தாலும் எப்பொழுதும் தான் கணிகை வீட்டிலேயே இருந்து இன்பமனுப விக்கவேண்டும் என்று எண்ணினன். அவன் தன்னால் தனித்துச் செல்ல இயலாத நிலையில் தன் கற்பரசியாம் மனையாளைப் பார்த்துத் தாசிவீட்டில் தன்னைத் தூக்கிச் சென்று விடுமாறு அவளிடம் கூறினன்.

“சுத்தமனத் தாசையென்றுந் துரந்த தில்லை சுவேதவதி யிதந் துணைவன் றனக்கே சூழ்வாள், மத்த மனத்தானும் பூருவகன்மத்தால் வனை ந்திவ்வா ருமயத் தான் மலர்க்கா லங்கை, மெத்த முடங்கிக் கட்டுண் டங் கம் பங்கன் றியம்ப முடமாகி விடத் தனக்கு, சத்தமிலா திருந்தாலுந் தாசிகூட்டந் தன்னையொழித் திருந்தறி யான் ருனெருக் கால்.

மதன மம்பர் செறிந்தாறு சுவையோ டன்ன மாந்தி மனே யாள்முகமா மதிக்க ணுற்று, விதனலந்தந் திடுங் கணிகை யில்லத்தென்னே யெடுத்தேந்திக் கொண்டு விடென் றியம்பு மேல்வைக், கதனமுறக் கங்குலிடைக் கணவனேத்தன் கந்தரத்தி லேற்றிவைத்துக் கச்சளங்கள். சதனமரை மலர்க்கணுக்குட் டதைய வல்கண் தாசி மனே குறித்தந்தத் தவத்தாள் சென்ருள்.''

மாண்டவியமுனிவர் ஒரு நகரின்புறத்தே தவஞ் செய்துகொண்டிருந்தார். நகர்க்காவலர்கள் அவரை அறியாது கள்வரென்று எண்ணிக் கழுவிலிட்டார்கள். அவரும் தான் முன்பு செய்த பாவம் இது என்று எண்ணி, அத்துன்பத்தை அனுபவித்தார். ஒருவரிடமும் தன் உண்மைநிலேயை அவர் கூறவும் இல்லே. சுவேதவதி, மாண்டவிய முனிவர் கழுவில் தொங்கிய வழியே, முடம்பட்ட தன்கணவனேத் தூக்கிக்கொண்டு தாசிவீட்டிற்குச் சென்ருள். வழியிடை மாண்டவிய முனிவர் கழுவிடைத் தொங்கிக்கொண்டிருப்பதை அவள் அறியமாட்டாள். அதனுல் கழுவில்நின்ற அம் முனிவர்மேல் உராய்ந்துவிட்டாள். முனிவர் துன்பம் தாங்காமல் அவளுக்கு அமங்கலியாகுமாறு சாபம் கொடுத்தார். முனிவரிட்டசாபம் கற்புடைய சுவேதவதிபால் செல்லவில்லே. சுவேதவதியின் மறுசாபத்தால் வழக்கமாகத் தோன்றும் சூரியன் தோன்ருததால் உலகமே அந்தகாரத்தில் மூழ்கியது. உண்மையினே உணர்ந்த தேவர்கள் சுவேதவதியை அடைந்து வேண்டினுர்கள். சுவேதவதியின் கற்புமேம்பாட்டால் சூரியனும் தோன்றினுன். அவளது கணவனின் முடமும் நீங்கியது. மாண்டவியரின் சாபமும் நீங்கிற்று.

"உற்றவுரி யோர்க்குரிமை யாயுளுற்று முபாசனேயா லுழந்தயர்ந்தே னுந்தவாய்மை, பற்றநின்ற

செயலானு மெய்மை பெற்ற பதிவிரதா பாவமுறும் பான்மையாலுங், கற்றவர்கள் புகழ்ந்தேத்துங் கதிரோ னின்று காணவுதித் திடவேண்டா மென்று சாபஞ், சுற்றவெடுத் துரத்தணையுந் துணைவன்றன்னை தூக்கிக் கொண் டேகியந்தச் சூளைவிட்டில்.

கிள்ளைமொழிச் சுவேதவதி கேள்வனைவிட் டனு மதியைக், கொள்ளைகொண்டு தனதில்லங் குறுகினுள் குறுகுதலும், வெள்ளைவலக் குலமுழங்க வேலைமுகட் டினில் வெய்யோன், பிள்ளையிளங் கதிர்பரப்பிப் பிறங் கினு னிலைப் பெரிதும்.

சிவசத்தி தெறித்தலினுற் றிகணவமா மணியிலுறு, நவசத்தி மார்கட்டி னண்ணுநவ விரரென, தவசத்தி பெறுந்தையல் சாற்றியவெஞ் சாபத்தாற், றிவசத்தின் றெழில்புரிவோன் றெரிசிக்கத் தோன்றிலனல்.

எல்லெழும்பா திருந்தளவி லிருளுலகம் முழுது முற்று, வல்லெனவா கியதெவர்க்கு மறிவெழுந்த திலைசற்றுஞ், சொல்லெச்ச மகங்கள்புன் றேந்தியற்று நித்தொழில்க, ளில்லெனு திருந்தான மியலுமனுட் டானங்கள்.

ஆலயங்க டொறுமமல னுதியர்க ளிடத்தலரின்
மாலையணிந் தர்ச்சிக்கும் வழிபாடு மஞ்சனமுங்
காலையறிந் தாற்றுமவு பாசனமுங் கருதுமறை
நூலையத்தியானஞ்செய் நோன்மையுமற்றனவுலகில்.''

கதிரோன் எழாததால் ஆலயங்களில் பூசை நடை பெறவில்லை. ஆன்றோர்கள் தங்கட்குரிய அனுட்டா னங்கள் செய்தாரில்லை. அறிவுவிளக்கம் தடைப்பட் டது. இவ்வாறு அங்கரின் செயலற்ற நிலையை விளக்கி யுள்ளார்.

"மதரரிக் கண்ணுளே மெச்சி வானேர் கற்பத் தணை ந்தார், புதரெவரும் போற்றிடப்பொற் புறும்பதி யேவலைப் புரிந்துச், சிதர்செறிந்த துலைப்பொன்னிச் சிந்தாடிச் செல்லுமற, வதரிடைச்சென் றகமகிழ்ந்தங் கருணேயந்துற் றனஎன்றே."

## முதலே அரக்கவடிவு நீங்கியது

"நவுமியங்குங் கடல்புடைசூழ் ஞாலமெல்லாம் புகழ்ந்தேத்த, பவுமியபாக் கியவளங்கள் பரலோகத் தனுபவிக்குஞ், சவுமியபோ கங்களிவை தந்திடுங்கா விரிமகிமை, தவுமியமா முனியுரையாற் ருன்றேறித் தவம்புரிந்தே."

சதத்துய்மன் என்பவன் வசிட்டமகாமுனிவரின் சாபத்தால் அரக்கவடிவு அடைந்தான். அவன் அது முதல் பலவித துன்பங்கட்கு ஆட்பட்டான். செய்யத் தகாத செயல்களே எல்லாம் செய்த அவன் முடிவில் காவிரியை அடைந்து முறையாக நீராடினுல்தான் இச்சாபம் நீங்கும் என்று உணர்ந்தான். அவ்வாறே காவிரிநீராடிச் சாபம் நீங்கப்பெற்ருன். அவனுக்குக் காவிரிநதியின் பெருமையை உணர்த்தும்நிலேமையில் துருவாசரின் சாபமும் இங்குக்கூறப்பட்டுள்ளது.

"சிதத்துய்ம லெனச்சிறந்த சிரமுகுக்க ளுண்டு வக்க, மதத்துய்மனங் கலங்கலென்று வாய்விளவில் வாய்பிளந்து, திதத்துய்மன் நிறப்பலவீய்ந் திடுவ னத்திற் செறிந்திடும்யான், சதத்துய்மனப் பேருடைய தலேவனெனத் தேருதியால்.

மதிட்டலத் தோணிகளோடும் வாகினிகள் புறங்காக்க சுதிட்டராய்ச் சாகேதத் துறுமரசர் தொகைகளுக்கு

வதிட்டமே போன்றதரு வருந்ததியை யணை கணவன் வதிட்டனெனும் பெயருடைய மாமுனி சாபத்தாலே.

அரக்கவடி வெடுத்ததினு லறைந்தன னிவ்வா றென்று, விரக்கவவ னெனக்குரைத்தா னிரகுவு னியுங் கருணை, சுரக்கமொழிந் திடுமொழியாற் ருேன்றுமுற் சாதகனினைப்பு, புரக்கரசன் றனையணைந்தோன் புகல் வனிச்சாபக் கழிவு.

மண்டுதிக்குந் துலைப்பொன்னி மஞ்சனத்தா லரக் கவுரு, விண்டொழியும் வேறென்ருல் விழிவுலையென் றனதுபுத்தி, யண்டு நரகோ டிழியு மழிபிறப்பு மவற் கில்லைக், கண்டுவந்திக் காவேரி காலையிலா டினர் களுக்கே.''

துருவாசமுனிவர் பொற்றுமரைமலர் மிகுந்திருந்த தடாகத்தோடு கூடிய சோலையின் அருகில் நீண்ட காலம் கடுந்தவம் செய்துகொண்டிருந்தார். அருகில் ஒரு ஓடை இருந்தது. அவ்வோடையில் பல பெண் கள் குழ ஆகா என்பவன் நீராடிக்கொண்டிருந்தான். அவன் தன்னுடைய பழவினை காரணமாகத் துருவாச முனிவரை அறியாது பயமுறுத்தத் தொடங்கினுன். துருவாசமுனிவர் அவனை முதலையாகப் போகுமாறு சபித்தார். பின், அவன் உண்மை உணர்ந்து துருவாச முனிவரிடம் வேண்ட, நீ காவிரிநீராடிச் சாபநீக்கம் பெற்று விடுபேறு அடைவாய் என்ருர். அவ்வாறே அவனும் காவிரிநதியில் நீராடிச் சாபம் நீங்கி விடுபேறு அடைந்தான்.

'' *தீபமெனத் திகழ்ஞான திருட்டியிறை் பார்த்தற* வன், கோபங்கொண் டந்தநரா தமனை யுளத்திடைக் குறித்துச், சாபந் தந்தனன் ருளிற் சயனகத்தாற் கிறிய

தால், சோபங்கொண் டுழன்முதலைச் சொருபமடை வாயென்ன,

உறுவ னித்திற முரைத்தலு முரைத்தன னுன்னுற், பெறுவதான விச்சாப மெந்தனை விடப் பிரிப்பாய், மறு வறந்தவ மாதவ வணை ந்த வித்துயர, மறுவதெப்படி யென்றுசாவின னெனவறவன்.

இடங்கர் மேனிபெற் றெறிந்திடுங் கடலிட வையினுற்
றடங்க லற்றடைந் தருடருஞ் சய்யமானதியி
லுடங்க மஞ்சன மாடியிவ் வுருவொழித்துனது
விடங்க மெய்யெடுத் தும்பரின் விளங்குநீ யென்ருன்.

ஏடணை யிழந்தொ னிவ்வா றியம்பமுன் னிடங்க ராகிக், கோடணை குரவை யாற்ருற் குறுகியே குளிர் முத்தங்கள், நீடணை யலைத்தொ துக்கும் நின்மலப் பொன்னி யாற்றின், மாடணைந் தாடி வன்மீன் வடி வொழித் தெழுந்ததன்றே.''

## காவிரிதரும் பலன்கள் கூறியது

காவிரிநதியில் நீராடுவதால் எத்தகைய பாவங்கள் நீங்கும் என்று கேட்கக் கபிலமுனிவர் பின்வருமாறு கூறலானுர். உலகிலுள்ள நதிகளுள் மிக மேம்பாடு உடையது காவிரி. காவிரிநீராடச் செல்வோன் திட சித்தமுடையவனுய்க் கையைத் தலைமேல் குவித்துக் காவிரியை முன் வழிபடவேண்டும். பின், முறைப்படி நீராடவேண்டும். அதிலும் துலாநீராடல் மிக்க சிறப்பு உடையதாம். தவம், தானம் இவற்றைக் காட்டிலும் மேலான பலனைத் தந்து நீராடுவோரின் அச்சத்தைப் போக்கும். இதுவன்றி வேறு தீர்த்தங்களில் சென்று நீராடவேண்டிய அவசியமும் இல்லை.

காவிரி ஒழிந்த ஏனைய தீர்த்தங்கள், தங்கள்பால் பல பாவிகள் நீராடியதால் தங்கள் மேனி கருநிறம் அடைந்தன. அந்தத் தீர்த்தங்கள் யாவும் காவிரியில் நீராடித் தங்களைப் பற்றிய பாவம் நீங்கி, உண்மை உருவையும் ஒளியையும் அடைந்தன. பாவங்கள் பல செய்தோர் காவிரிநதியில் மன விருப்புடன் முழுகுவாராஞல் அவர்கள் பாவம் நீங்குவதோடு பிறவாத பெரு நெறியையும் அவர்கள் பெறுவார்கள். அன்றியும், ஒருவன் கற்பகாலந்தொட்டுச் செய்த பாவங்களும் இக்காவிரிநீராடுவதால் தொலைந்துபோகும். காவிரிநதி கீழ்த்திசைநோக்கி ஓடுவதால் அதில் ஆடுவோர் அந்தத் திசைநோக்கி நீராடுதல் பெரும்பயன் உடைத்தாம். காவிரி ஆடுவதற்குமுன் அவரவர் வழிபடும் தெய்வங்களை நினைத்து முன்னர் சங்கல்பம் செய்துகொள்ளுதல் வேண்டும். அதன்பின்னரே காவிரிநதியில் ஆடவேண்டும். முடிந்தபின் காவிரிபுராணம் கேட்கவேண்டும். முடிவில் பொன் மணி ஆடை முதலியவற்றைத் தானமாகக் கொடுத்தல்வேண்டும். இம்முறையாக நீராடுவோர் என்றும் இறவாப் பெரும்பயனடைவர்.

ஆலயங்கள், மண்டபங்கள், கல்விக் கூடங்கள், சத்திரங்கள் முதலியன கட்டுவதால் ஒருவனடையும் பயன் காவிரிநதியில் ஆடுவதாலேயே கிடைத்துவிடும். குருடன், முடவன், கருமவினையில் உழலும் மனிதன் ஆகியோர்க்கு உதவிசெய்யும் புண்ணியத்தைக் காவிரி ஒன்றே கொடுக்கும்.

அன்னம் பன்றி உருவெடுத்து அடிமுடிகாணுமல் அல்லலுற்ற அரி அயனைப்போலாது காவிரியாடுவோர் மாணிக்கவாசகர்பொருட்டு ஒருகூடை மண்சுமந்து

பாண்டிய மன்னனுல் பிரம்படியும்பெற்ற இறைவனின் அருளை எண்ணியவாறே பெற்று உய்வர். அல்லாமல் இறைவனை அர்ச்சிக்கப் பூந்தோட்டம் அமைத்தவர், வைதிகநெறியில் நின்று மந்திரங்களைச் செபித்தவர், இறைவன் திருப்பெயரை இடைவிடாது வாயாற் கூறியவர் ஆகியோர் இறுதிக்காலத்திலே அடையும் பயனை இப்பொன்னியே நல்கும். அன்றியும் காவிரி நதியில் உதயகாலத்தில் ஒருமுறை நீராடுவோர் அறிவுடையோன் அடையும் பயனையும் இன்னும் அனைத்துப் பயனையும் அடைவர்.

இவ்வாறு நீராடுவோர் மகேசுரன், மகாதேவன், உமையொருபங்கன், மேருச்சிலையைக் கையில் ஏந்தியுள்ள திரிபுராரி, புனிதன், பூதநாதன் ஆகிய இறைவன் புகழைக் கூறும் புராண வரலாறுகளைக் கேட்டல் வேண்டும். அவ்வாறு கேட்போர் சுவர்க்கபோகங்களை எளிதிலடைந்து அவ்வுலகில் நிலைத்துவாழ்வார்கள்.

"இட்ட மல்கலை யிரதிசெய் தவனுமைந் தெச்ச
முட்ட ளித்திட வுஞற்றினே னுங்கொளூ தியமும்
துட்ட வைம்புலத் தொடர்பறுத் தவன்பெறுஞ் சுகமும்
சிட்ட மேவிய காவிரி நானமே சேர்க்கும்.

புகலென் றுற்றவற் புரந்தவன் பெற்றிடும் பொற்பு
மிகலு றும்பசுக் களை நிலை பெறுத்தவன் வியப்பு
நிகல்வி ருத்தனைப் பாலனை யளித்தவ னயக்குந்
தொகலுஞ் செல்வமுங் காவிரி நதிதொகுத் தளிக்கும்.

இருண்மி குங்குரு டனைமுட வனையினி தளித்தோன்
மருண்மி குங்கருங் கருமத்தி லழுந்துமா னுடனை
தெருண்மி கும்படி கிளப்பினேன் சேர்ந் திடுஞ்சிறப்பு
மருண்மி கும்பொன்னி யாறுவந் தளித்திடு மன்றே.

இட்டி செய்தவ னரசினே டிலேத்துளாய் பதித்தோன்
பெட்டி யுள்ளயர் வகன்றிட விதித்தமன் டபங்கள்
கட்டி வைத்தவன் பாடக சாலேயைக் கண்டோன்
சுட்டி யார்ந்திடும் பயன்றருங் காவிரித் தூய்நீர்.

சத்தி ரம்பகச் சாலேவே தியர்மனே தந்தோன்
சித்தி ரஞ்செறிந் திடமுனஞ் செய்தவிப் பொருள்கள்
பத்தி ரம்பெறச் சிரஞேத் தாரணம் பணுவோன்
மித்தி ரப்பயன் பெறுதலேக் காவிரி விதிக்கும்.

மராரி மகேசுரன் மகாதேவன் மங்கை மருங்குளான் மாமேருச் சிலேகைவைத்த, புராரிபுனிதன் பூதநாதன் பூதப் பொற்பருளாகிய பொன்னிப் புதுமையான, முராரி வடிவானேன் சேர்த்துரைத்த வித்தையொழிந்திடக் கேட்டோன் பாவ முழுதுமற்றுச், சுராரிகளேச்செகுத்த சுரேந்திரன் சுகிக்குஞ் சுவர்க்கபோகங்களெல்லாந் துன்னி வாழ்வான்.''

## பன்றியுரு நீங்கியது

வேதம்வல்ல பிராமணன் ஒருவன் முன்பு செய்த வினையால் ஊர்ப் பன்றியாகித் திரிந்துகொண்டிருந்தான். அவன், பொன்னிநீராடிச் சாத்தன்கோயிலில் மலர்சொரிந்து தன்னேத் தானே பலியிட்டுக்கொண்ட ஒருவனது நிலேயைக் கண்டான். பின், காவிரிநதியின் சிறப்பை உணர்ந்து, அதில் நியமமாக நீராடித் தன்னேப் பற்றியிருந்த பன்றியுரு நீங்கப்பெற்று முடிவில் முத்தியும் அடைந்தான். இந்த அத்தியாயத்தில் காவிரியின் சிறப்புப்பற்றிய செய்யுட்கள் சிந்திக்கத்தக்கவை.

" வகித்தநற் குணநற் செய்கை மனமுட லனேத்துமாற
தகித்தசா ரங்க ளான சங்கிசா ரத்தி லாய்ந்தாற்
சுகித்தலேத் துய்க்கச் சூழுந் தூயகா வேரி ஞன
முகித்தநற் சார மாகு முழுதுல களித்த கோவே.

உறக்கத்திற் பாதி வாழு ளொருவின திள்மை மூப்பிற், சிறக்குமஞ் சனமுற் ருது சிறிதஃகும் பொரு ளீட் டத்தில், இறக்கவைம் புலநு கர்ச்சி யிடைச்சில குன்று மேதை, பிறக்கமுற் றிடுவ தெங்கே பெறுமாயுப் பிரியாக் காலே.

மக்களாற் றுலேக்கா வேரி மகிழ்ந்தாடப் படுமி லக்கந், தொக்கவெண் பத்து நான்காய்த் தொகை தொகைபெறுந் தோற்றத் துக்குண், மிக்கமா னிடப்பி றப்பு விசேடமா மேன்மை யாவும், தக்கசென் மாந்த ரத்திற் சாலவாற் றியவ ரத்தால்.

ஐயாதே வதைதீர்த் தங்க ளாண்மையி லறிவுண் டாக்கும், உய்யமா னுடப்பி றப்பிங் குற்றுமித் துலாக் காவேரி, துய்யமஞ் சனமா டாதான் றாய்பதி யில்லா னுவான், வய்யமே லதனுற் பொன்னி மஞ்சன மயர்வா யென்றும்.''

இப்பாடல்களால் மக்களது நிலேயாமையும், அந் நிலேயாமையைப் போக்கிக்கொள்ள ஒரேவழி காவிரி நீராடுதலே என்பதையும் விளக்கியுள்ளார். அல்லா மலும் எத்தகைய பாவஞ்செய்தவர்களாயினும் காவிரி நீராடினுல் அவர்கள்பாவம் உடனே நீங்குமென்றும் கூறுகிருர்.

## சுசி அயனுலகு அடைந்த வரலாறு

அகத்தியர் கவேரனுக்குப் பின்வருமாறு கூறு கிருர். வேதங்களே உணர்ந்து நன்னெறியில் ஒழுகும் சுசி என்னும் அந்தணன் விசுவவத்தை என்னும் அருங் குணவதியை மனேயாளாகக் கொண்டு இல்லறத்தை நல்லறமாக நடத்திவந்தான். சுசியோ சீலம் மாண்பு

முதலாய நற்குணங்கள் இயல்பாய் அமையப்பெற்ற வன். அவனிடம் விசுவவத்தை இல்லாதநிலைமையைச் சொல்லாமல் சொன்னாள். அரியநாயகரே! யான் இலை, சருகு, காய், கனிகள், தண்ணீர் இவைகளை மாறிமாறி உண்டு வருகின்றேன் என்று கூறினாள்.

சுசி தனது மனைவியை நோக்கி அறவடிவினர்கட்கு நீ கூறும் வறுமை எதுவும் செய்யாது என்று கூறினான். தன் மனையாளை அழைத்துக்கொண்டு தவஞ் செய்வதற்குக் காவிரிக்கரையை அடைந்தான்; காலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் சந்தியா வந்தனம் முதலியவைகளைக் காவிரியில் நீராடிச் செய்தான்; மனையாளோடு பிரமனை நோக்கித் தவஞ்செய்யத் தொடங்கினான். அத்தவத்திற்கு இரங்கிப் பிரமனும் வெளிப்பட்டான். பிரமனிடம் சுசி பெருமானே! யான் வறுமையால் வாடுகிறேன்; எனக்குச் செல்வம் முதலியவைகளை அளித்தருளவேண்டும் என்று வரம் வேண்டினான்.

பிரமனும் நீ முறைப்படிக் காவிரிநீராடித் தான தருமங்கள் செய்து விரும்பிய செல்வமனைத்தையும் அடைவாயாக என்று வரம் கொடுத்து அருளினான். பிராமணனும் சீதையை ஒத்த கற்பின் மேம்பாட்டினை யுடைய தன் மனையாளுடன் தான தருமங்கள் செய்தான். தன் மனைவி மக்களோடு முடிவில் பிரமலோகம் அடைந்தான்.

*"சாதக மாறு ளாற்றுந் தருமங்க ளனைத்தி னுக்கு,*
*தீதக மொருவித் தன்மச் சிந்தனை யாறு ளன்னாள்,*
*பாதகம் பறிக்கும் பொன்னி படிந்தொழிந் தகத்தி*

ருந்த, பீதகந் தனையன் போடும் பிராமணார்க் களித் தான் ருனம்.

மான்றலற் றயன்வ குத்த வாறுகா வேரி யாடி, யான்றவர்க் களித்த றன்னு லாக்கஞ்சிக் கிரம டைந்து, தோன்றவோ றயுத மாண்டு துலாநான பிரபா வத் தாற், ருன்றயி தக்க ளப்பெண் டன்னெடு மின்பந் துய்த்தான்.

வாசர கரனறாக் கண்ண வந்துகா விரிமூழ் குற் ருேன், காசர வூர்தி யாலே கடுநர கடைய மாட்டான், கேசரர் போற்றச் சத்தங் கெழுமிநற் றுறக்க பூமி, கோசர மாக மேவிக் குதூகலங் குலவா நிற்பன்.

புற்புத மெழும்பும் பொன்னிப் பூம்புனற் புண்ணி யஞ்சொல், லற்புத மான விந்த வத்தியா யத்தை யாவ, நற்புதா நவிலக் கேட்போ னுசமுற் றகம ஊத்து, பொற்புத வியபொன் ருட்டிற் புக்கினிதமர்வ னன்றே.''

## தென்புலத்தார் திறன் உரைத்தது

சாரிதத்தன் என்பவன் ஐம்புலன்களையும் வென்று நல்லொழுக்கமுடையவனுய் வாழ்ந்துவந்தான். அவன் ஒருநாள் தன் மனம் விரும்பியவாறு காடுகள் சூழ்ந்த இடத்தை அடைந்தான். அக்காட்டிலுள்ள மரங்கள் செடிகள் கொடிகள் ஆகியவற்றின் அழகில் ஈடுபட்டு நின்றுகொண்டிருந்தான். அவ்வமயம் காட்டில் கார் கார் என்னும் பேரொலி கேட்டது. கேட்ட சத்திய விரதன் பயங்கொண்டான். அங்கிருந்து அகல எண்ணி னுன். அப்படி அகன்றவன் பசிய புல், கொடி, மரம் ஆகியவை தாழ்ந்து பாழ்பட்டநிலையிலுள்ள கிணற்றி னைக் கண்டான். கிணற்றினின்றும் ஒரு பேரொலி

எழுந்தது. சத்தியவிரதனே! நாங்கள் இக்கிணற்றுள் இருக்கின்றோம்; உன்னையே அழைக்கின்றோம்; நீதான் எங்களைக் காப்பாற்றவேண்டும் என்று கூறினார்கள்.

இவ்வுரையைக் கேட்ட சத்தியவிரதன் ஆச்சரியம் அடைந்தான். உடனே எதிரில் தோன்றிய பிலத்தைப் பார்த்தான். அதில் உள்ளவர்களைப் பார்த்து நீங்கள் யாவிர்? அழைத்த காரணம் யாது? என்று வினவினான்.

சத்தியவிரதனே! நாங்கள் அனைவரும் உன் குல முன்னோர்கள்; நாங்கள் செய்த பாபத்தால் இந்தக் கூவத்தை அடைந்து துன்புறுகிறோம் என்றார்கள். சத்தியவிரதன் அவர்களைநோக்கி நீங்கள் இந்நிலையுற்று இங்குவரக்!காரணம் என்ன? அதனை எனக்கு விளக்க மாகக் கூறுங்கள் என்றான்.

முன்னோர்கள் யாவரும் சத்தியவிரதனை நோக்கி நம் குலத்துள்ள எவரும் காவிரியாடித் தானம்கொடுக்க வில்லை; அதனால்தான் நாங்கள் இத்துயர் அடைகின் றோம்; அதனால் நமது முன்னோர்கள் அன்னதானம், சுவர்ணதானம், காவிரியில் நீராடிப் பிண்டம்போடு தல், கோதானம், பூதானம் ஆகியவைகள் செய்ய வில்லை; நீயோ சத்தியவிரதன்; நம் குலத்தில் மேம் பட்டவன்; முன்னோர்கள் செய்யாதுவிட்ட அறங்களை நீ செய்து, எங்களை இத்துன்பமாகிய கிணற்றினின்று கரையேற்றவேண்டும் என்று கூறினார்கள்.

சத்தியவிரதன் மனம் நடுங்கினான்; செய்வது அறி யாது திகைத்தான்; அழுங்கினான்; மூர்ச்சையானான்; தாதையர்களே! நீங்கள் கூறியவாறு அறத்தை உடனே செய்கின்றேன் என்று உறுதியளித்தான். அவர்கள்

கூறியவாறு தானங்களைச் செய்தான். சூலமுன்னோர் களும் பாபநீக்கம் அடைந்தார்கள்.

"மெலிவடைந் திடும்பி திர்க்கள் மேனிகாட் டாது மாய்ந்தார், பொலிவதி சயப்பார்ப் பானு போந்தனன் கடவுட் பாழி, மலிவுறு திகட னக்கும் மகிணிறை வருட்பி திர்க்கும், வலிவரும் படிதன் னில்ல மனையவ ளோடுஞ் சென்றே.

அவலையுற் றிருக்கும் பொன்னி யாற்றிநற் றவிலி யானுள், கவலையற் றிடநீ ராடிக் கரைந்தன யாவுஞ் செய்தான், குவலையத் தொறுந ராளுங் கோசிக மறைப் பார்ப் பாரும், திவலைக டருமவ் வாற்றிற் செப்பின தியாவுஞ் செய்தார்."

## பிள்ளைகட்கு உரைத்தது

சிவவர்மன் என்னும் வேதியன் முறையாக முத்தீ வேட்டு அறஞ்செய்து வாழ்ந்துவந்தான். அவனுக்கு அறமே வடிவாகப் பல அரிய குழந்தைகளும் இருந் தார்கள். சிவவர்மன் நரை திரை மூப்பை அடைந் தான். உடன் தனது கற்பிற்சிறந்த மனையாளை நோக்கி னான். என் அருங்குணச் செல்வியே! நாம் இதுகாறும் மக்களொடு மகிழ்ந்தோம்; மனையறம் காத்தோம்; மிக்கிழுக்கும் காமத்தினுல் ஏற்படும் வேட்கையை விட்டொழித்தோம்; இனி, நாம் இருவரும் காட்டினை அடைந்து, தவஞ்செய்வது ஒன்றே நமக்கு நற்பயனைத் தருவது என்று நவின்றான்.

உடனே இருவரும் காட்டினை அடைந்தார்கள். அரன், அயன், அரி ஆகிய முக்கடவுளரையும் முறைப் படி பூசித்து வழிபட்டார்கள். அந்நிலையில் அவர்கள்

தங்களுடைய் பிள்ளைகட்குப் பின்வருமாறு கூறலானார்கள்.

ஒருவன் துலாமாதத்தில் காவிரிநீராடினால் அவன் வைகுண்டத்தில் இனிது வீற்றிருப்பான். மக்கட் செல்வத்தை அடைவான். செல்வத்தை விரும்பினால் செல்வத்தையும் அடைவான். மேலும், தானியங்கள் தனங்கள் இவற்றைத் தானம் கொடுக்கவேண்டும் என்று கூறினார்கள்.

அவர்கள் கூறியபடி எல்லோரும் துலாக்காவிரி சென்று நீராடினார்கள். கோரிய பயனையும் பெற்றார்கள்.

## நரகசதுர்த்தசி வரலாறு

பூமிதேவிக்கு நரகன் என்னும் புத்திரன் ஒருவன் இருந்தான். அவன் அசுரமரபினன். அவன் பிரமனைக் குறித்துக் கடுந்தவஞ்செய்து, அவன்பால் வேண்டிய வரங்களைப் பெற்றான். வரங்களைப் பெற்றும், தனது மரபினரைப்போலவே தேவர்களைத் துன்புறுத்தினான். தேவர்கள் நரகாசுரனது கொடுமையைப் பொறுக்க முடியாமல் துவாரகை சென்று கண்ணபிரானிடம் முறையிட்டார்கள். தேவர்களது குறையைக் கேட்ட கண்ணன் தனது சக்கரப்படையால் நரகாசுரனைக் கொன்று தேவர்களைக் காப்பாற்றினான். ஆயினும், அக்கொலை கண்ணனை விடாது பிரமகத்தியாகப் பற்றியது. பிரமகத்திபற்றிய கண்ணன் அதன் துன்பத்தைப் போக்கிக்கொள்ள இயலாது தவித்தான், முடிவில் கயிலாயம் சென்று பரமசிவனை வணங்கி முறையிட்டான். பாபம் நீங்க வழியருளவேண்டும் என்று திருவடியில் விழுந்து வணங்கிக் கேட்டான்.

இறைவர் கண்ணனுடைய நிலையை அறிந்தார்: தேவர்களோடு கண்ணனையும் அழைத்துக்கொண்டு மாயூரதலத்தை அடைந்தார். காவிரிநதியைச் சார்ந்தார். கண்ணனுக்குக் காவிரிநதியைக் காட்டினர். இந்நதியில் ஐப்பசிமாதத்தில் கிருட்டிணபட்ச சதுர்த்தசியில் நீராடினால் உன்னைப் பற்றிய பிரமகத்தி நீங்கிவிடும் என்றார். கண்ணனும் அவ்வாறே காவிரியில் நீராடினன். கண்ணனைப்பற்றிய பிரமகத்தியும் நீங்கியது. இவ்வியத்தகு சிறப்புக்களைக் கண்ட தேவர்களனைவரும் அன்று அங்கு நீராடினர்கள்.

அவ்வமயம் புதல்வனை இழந்த பூமிதேவி அங்கு வந்தாள். இறைவரிடம் பின்வருமாறு வரம் வேண்டினள். என் மகன் இறந்த இத்திதி இன்றுமுதல் நரக சதுர்த்தசி என்ற சிறப்பினைப் பெறவேண்டும் என்று வேண்டிக்கொண்டாள். தேவர்களும் அவ்வண்ணமே ஆகுக என்றார்கள்.

அன்றியும், அந்தத் திதியில் உலகில் உள்ளோர் வைகறையில் எண்ணெய் தேய்த்துக்கொண்டு வெந்நீரில் நீராடுவார்களானால் அவர்கட்கு நரகம், தீப்பயம், நோய் இவைகள் உண்டாகாமல் அருள் செய்யவேண்டும். மேலும் அன்று, புண்ணியத்தைத் தரும் காவிரியில் நீராடி, அவரவர்கள் இயல்புக்கு ஏற்பப் பொன், பூமி, பசு, நெய், வீடு ஆகிய இவைகளைத் தானஞ்செய்வார்களானால் அவர்கள் எல்லாப் பாபங்களினின்றும் விடுபட்டு மேலான நல்ல இன்பவாழ்வினையும் பெறுமாறு அருள்செய்யவேண்டும். முடிவில் அவர்கட்கு முத்தியின்பமும் கைகூடுமாறு அருளவேண்டுமென்று வேண்டினள். இத்தகைய சிறப்பைக் கொடுப்பது

காவிரியாகும் என்ற உண்மையைப் பூமிதேவிக்குத் தேவர்கள் விளக்கிக் கூறினுர்கள்.

## மனுடவடிவு ஒழித்தது

திருமால் இலக்குமியை மனுடவடிவு எடுத்துப் பூலோகத்தில் அவதரிக்குமாறு சாபங்கொடுத்தார். இலக்குமியும் பிருகுமுனிவருக்கு ஒரு பெண்ணுகத் தோன்றி வளர்ந்து வந்தாள். பிருகுமுனிவர் தன் மகளுக்குக் காவிரியின் சிறப்பினைக் கூறுகின்றுர். ஐப்பசி மாதத்தில் சதுர்த்தசி திதியில் விடிவதற்குமுன் வெந்நீரில் எண்ணெய் தேய்த்து நீராடவேண்டும். அதன் பின் காவிரியில் நீராடவேண்டும். அவ்வாறு நீராடினுல் உன்னைப்பற்றிய பாவம் நீங்கிவிடும் என்றுர். இலக்குமியும் பிருகுமுனிவர் கூறியவாறே காவிரியில் நீராடிச் சாபநீக்கம் பெற்றுள்.

சிவயோகி ஒருவரின் தவத்தைக் கண்டு கலைமகள் பரிகசித்தாள். சிவயோகியார் சீற்றங்கொண்டு கலைமகளை மனுடவடிவு எடுக்குமாறு சாபங்கொடுத்தார். கலைமகளின் சாபமும் காவிரிநீராடியே கழிந்தது.

## புத்திரப்பேருதியுரைத்தது

இக்குவாகு தன் குருவினிடமும் மந்திரியினிடமும் தான்கண்ட கெட்ட கனவுகளைக் கூறி அதனுல் விளையும் பயனைக் கேட்டான். அவர்கள் இதனுல் உனக்கு எத்தீங்கும் நேராது: நீ முறைப்படி துலாமாதத்தில் காவிரியாடித் தானங்கள் செய்யவேண்டும்: அவ்வாறு செய்தால் உன்னைப்பற்றிய பாவங்கள் நீங்கப்பெறும்; நீ எல்லாச் செல்வங்களையும் அடைவாய் என்றுர்கள்.

அவ்வாறே அவனும் நீராடி வேண்டியசெல்வங்களைப் பெற்றான்.

## பிதிர்கீதமுரைத்தது

வீடுபேறடைய விரும்புவார், காவிரியில் நீராடிப் பிதிரர்கட்குத் தெர்ப்பணம் முதலியன செய்தல்வேண்டும். அவ்வாறு செய்பவரே புண்ணிய வடிவினராவர். அவர்களிடம் யமதூதுவர்களும் வர அஞ்சுவார்கள். திதிசெய்யும் முறைகள் விவரிக்கப்பட்டுள்ளது.

## காவிரியாடியவன் அதிகமென்றது

தசரதன் மகனாகிய இராமன் அசுவமேதயாகஞ் செய்தான். அவ்வேள்வியைத் தெரிசனஞ் செய்வதற்கு முனிவர்கள் பலர் வந்திருந்தார்கள். உரோமச முனிவரும் அவர்களுடன் எழுந்தருளியிருந்தார். உரோமசர் அட்டாவக்கிரர் என்ற முனிவரை வணங்கினார். அட்டாவக்கிரர் உரோமசமுனிவரைப் பார்த்துப் பின் வருமாறு கூறுகின்றார்.

உரோமசமுனிவரே! நீவிர் நூறுகல்பமாகச் சிறப்புடனிருக்கின்றீர்! நானோ அதில் பாதி ஆயுள் பெற்றுள்ளவன்; ஆயுள் குறைந்துள்ள என்னைத் தாங்கள் வணங்குவது பொருத்தமுடையதல்ல என்றார். அட்டவக்கிரரின் உரைகேட்ட உரோமசர் பின்வருமாறு கூறலுற்றார்.

முனிவரே! நான் மாயூரதலத்தில் துலாமாதத்தில் காவிரியில் நீராடிய ஆண்டுகளையே கணக்கில் கொண்டுள்ளேன்; அவ்வாறு பார்க்குங்கால் என்னைவிடத் தாங்களே வயதில் முதிர்ந்தவர் ஆவீர்; ஆண்டுதோறும்

இடைவிடாமல் துலா காவிரிநீராடியுள்ளீர்; அதனால் தாங்களே என்னைவிட மிக மேலானவரும் மூத்தவரும் ஆவீர் என்றார்.

இவற்றிலிருந்து மாயூர தலச்சிறப்பும், துலாநீராடுவதால் அடையும் பயனும் விளக்கப்பட்டுள்ளன.

"நீரமுற்றுக் காவேரி நனைஞ்செய்யச் சிந்தைவைத்தோர் சிரேட்டருண்மை தெரினி யென்று, வாரமுடன் வலந்திடுரோ மசன்சொல் கேட்டு மாதவ ரியா வருந்துலைக்கா வேரி யாற்றின், நீரமுகந் தாடவிருப் புடைய ரானார் நின்மலக்கா விரிகுடைந்தோ ராயு ணிடும், சீரருக வெனதுறுதி மொழியைக் கேளு செப்புவனூ ழிதிகாசச் சிறப்பிப் போதே.

நறுமை நண்ணிய பொன்னி நதியிடைச்
சிறுமை குன்றிடத் தீர்த்த மெலாம்புகு
முறுமை நீக்கு மொளிதுலை நாளையே
பொறுமை பூண்ட மனத்தொடும் போகியே.

மூழ்கு வீர்முத்தி யாமன் னதியிலே
மாழ்கு விரல்லீர் மன்னலிற் சங்கையை
வாழ்கு வீரென்று மாமறை யோன்சொல
வீழ்கு னெஞ்சி னரந்தையர் விட்டனர்.

தூக்கு மாதத்திற் காவிரி தோய்ந்துபி
விக்கு முத்தியை மேவின ராதலால்
ஆக்கு நல்ல வபிட்ட மனைத்தையும்
தேக்குங் காவிரி தேடி முழுகிலேன்."

## பிரமகத்தி நீங்கியது

அரசன் ஒருவன் குற்றம் ஒன்றும்செய்யாத பதுமனபன் என்பவனைக் கொலைத்தண்டத்துக்கு உள்ளாக்

கிறுன். உடன் பதுமனுபன் அந்த அரசனைப் பிரமகத்தி யாகப் பற்றிக்கொண்டான். அரசன் பலவாறு துன்புற்ருன். பலநதிகளில் நீராடினுன். பிரமகத்தி நீங்கியபாடில்லை. ஒருசமயம் எதிர்பாராமல் சாபாலிமுனிவரைக் கண்டு வழிபட்டான். முனிவர் அவனுக்கு மாயூரதலப் பெருமையையும், துலாமாதத்தில் காவிரிநதியில் ஆடும் சிறப்பையும் உபதேசித்தார். அம்முனிவரின் உபதேசம் பெற்ற மன்னன் துலாமாதத்தில் காவிரியில் நீராடிப் பிரமகத்தி நீங்கப்பெற்ருன்.

"பூசியா தரத்தாற் சேர்வை பூணமு தம்போற் காதை, பேசியான் புகழ்வன் வாயாற் பேணுதி மனத் தாற் பெட்பால், காசியா நகரத் தென்றுங் காதலித் துறைவோன் செல்வந், தேசியா ணரைக்கோ டேவ சுவாமிப்பேர் சிறந்த தூயோன்.

இந்தர வசைத்த வேணி யீசுர னினிது றைந்த, சுந்தர னிறைந்த காசிப் பதியினிற் சுகித்தோ னுக்கு, மந்தர முலேம லர்க்கை மதிமுக மாம்பற் செவ்வாய், கந்தர வால முற்ற காரிகை களமாய் வந்தாள்.

சதனவெய் கவின்செய் தோளி தனையரு ளமர்ந் தோ ரைந்து, வதனவே கப்பி ரான்வாழ் வாரணு சிப்ப திக்கண். மதனவே கப்பேர் பெற்ற மகிமைகொள் விஞ்சை யன்ருன், கதனவே கத்தோ டுற்றுக் கண்ட னன் கண்க ளாலே.

பம்பியி னலஞ்செய் கோடி பட்டிடை யிட்டொ துங்க, தும்பியின் மருப்பிற் கொங்கை துணைக்குறங் கல்கு லாளை, நம்பியின் ஞதவேளி னகுங் கணைக் கிலக்க தாகி, யம்பியி னுள்ள லேந்தே யனந்தலோ டமர்வா டன்னை.

உற்காரப் பணிவி டத்தா லுயிர்விடப் பிரம கத்தி, பற்கார மிதளுக் காம்பல் பனிமல ரைம்பா லுக்கு, நற் காரா னனத்துக் கல்லோ னவிலுமொப் படைந்த னுளுஞ், சற்காரந் தன்னை யாற்றுந் தாரத்துக் கான தென்றே.

சேபாலி கையும் பொங்கத் திரையெறிந் தார்த்த டர்ந்து, பூபாலி தஞ்செய் பொன்னிப் புகழுடன் பொதுவி லாடுங், காபாலி யருளைப் பெற்ற கருணைக் கோ ரிடமாய் நின்ற, சாபாலி முனிவன்முன நானமுஞ் சாற்றி னுல்.

கொங்குல வியபூம் பொன்னிக் கோல்மதிப் புல ரிக் காலஞ், சங்குலம் பிடச்சென் ருடித் தண்கடற் றிரைக ளார்ந்து, மங்குலின் மறைந்த வேந்தன் மறைப்பகன் றெழுந்த வாபோற், பொங்குல மலரொ ழிந்தான் பூசுரப் பசும னுபன்.''

## விதிபாதமகிமை உரைத்தது

வியதிபாதயோகத்தில் ஒருவர் இடபாருடராகிய இறைவனை வழிபட்டால் வழிபடுபவரின் வினைகள் யாவும் தொலையும். அறிவுக்கு ஒளியினைக் கொடுக்கும். திருமால் முதலியோர் செல்வத்தையும் தரும். அதனுல் வியதிபாதயோகத்துக்கு மேலான யோகம் வேறென் றும் இல்லை. காவிரிநதியைப்போன்று வேறு நதியும், அளவிட முடியாத பிறவியினை ஒழிக்கும் வியதிபாத யோகத்தைப்போன்று வேறு யோகமும் இவ்வுலகில் இல்லை. வியதிபாதயோகம் மாதந்தோறும் வருமாயி னும் ஐப்பசி மாதத்தில் வரும் வியதிபாத யோகமே மிக மேலானது. அன்று காவிரியில்படிந்து நீராடுவோர் சுவர்க்க உலகத்தை அடைந்து இன்புறுவர்.

நாராயணன் என்னும் தூயோன் வேதங்களை உணர்ந்து, அதன்வழி ஒழுகிவந்தான். அவனுடைய எட்டாவது வயதில் அவன் தந்தை இறைவனடிசேர்ந் தார். தாய் குழந்தையைச் செல்வமாக வளர்த்தாள். ஆயினும், இவர்களது வறுமையை நோக்கி உறவினர் எவரும் இவர்களை ஆதரிக்கவில்லை. பலர் இவர்களைச் சத்துருவாக எண்ணத் தொடங்கினர்கள்.

நாராயணன் தன் பொருளற்ற நிலையை எண்ணிப் பொருள்தேடக் கேரளநாடடைந்தான். அங்கே பல வகைப் பொருளைப்பெற்று வாணிபஞ்செய்து பொரு ளீட்டினன். அழகுமிக்க சிறந்த நங்கையை மணந்து கொண்டான். நிலம், வீடு முதலியன வாங்கினன். தன் மனையாளோடு இன்பந்துய்த்தான்.

இந்த நிலையில் பசுவதை செய்தவர்கள், பசுவின் இறைச்சியை உண்டவர்கள், கள் குடித்தவர்கள், காவிரி நீராடாதவர்கள், வங்கதேசத்தார், மலையாளம் சென்றவர்கள் ஆகியவர்களை ஒருவன் பார்க்க நேர்ந் தால் பார்த்தவன் உடனே சூரியனைப்பார்த்து வணங்க வேண்டும்.

இந்த நியதியை அறிந்த நாராயணன் ஆண்டுகள் தோறும் ஐப்பசிமாத வியதிபாதயோகத்தில் முறைப்படி காவிரியில் நீராடத் தொடங்கினன். தன்னல் முடிந்த வரை தானங்களைச் செய்தான். இப்புண்ணியங்களால் தனது மனைவியோடு சுவர்க்கலோகத்தை அடைந் தான். இதில் வியதிபாதயோகத்தின் மேன்மையும், அதில் செய்யவேண்டிய செயல்களும் விரிவாகக் கூறப் பட்டுள்ளன.

"அதிகமாய் நான தான மளித்திடும் பிரபா வத் தான், மதிகதழ் மைந்தர் வாழ்க்கை வாய்த்தனு பவித் துக் காலன், துதிகரைந் தருச்சித் தேத்தத் தோகையா ளோடுந் துய்க்கு, நிதிகண்மே னியோடி ருந்து நில வுந்தா னத்தை யுற்ருன்."

## வேதாளம் முத்திபெற்றது

விந்தியமலேயிலிருந்த ஒரு வேதாளம் முறைப்படி ஒன்பது மேலான பெரியவர்களேக்கண்டு வணங்கியது. அவர்களிடம் தான் பூர்வத்தில் ஒரு அந்தணன் என்றும், எல்லாச் சாத்திரங்களும் அறிந்தவன் என்றும் கூறியது. என்னுடைய மன இடும்பினுல் முன்னர் பிரமராட்சதன் ஆயினேன்; அதன் பின்னர் வேதாள உருவாகி இவ்விந்தியமலேயில் அலேந்துகொண்டிருக்கிறேன். என்னுடைய இந்த இழிநிலேயைத் தாங்களே போக்கியருளவேண்டும் என்று வேண்டிற்று.

அப்பெரியவர்கள் வேதாளத்தின்மேல் கருணே கொண்டார்கள். துலாகாவிரியின் சிறப்பை உபதேசித்தார்கள். வேதாளமும் அவர்கள் உபதேசம்பெற்று நியமமாகக் காவிரியாடி முன்னேய உத்தம உருவினே யடைந்து முடிவில் முத்தியும் பெற்றது.

"விந்தமா மலேயின் சாரல் விடரட வியல்வே தாளஞ், செந்தழற் கோர மேனி திகழமுன் னிற்பக் கண்டார், அந்தவே தாள முன்னர் அணுகிய பரம கஞ்சர், தந்தபே ருருனேக் கத்தாற் றன்மையும் படைத்த தன்றே.

பிரமராக் கதமிவ் வாறு பேசவொன் பதின்ம ரான, பிரமவே தியரு ரைப்பார் பிராயச் சித்தத்தைச் சொல்

வோம், பிரமன்முன் னிச்ச கத்திற் பிறப்பித்த மனுடா
ளுக்குப், பிரம நற் சுகத்தைப் பேண வைத்தனன் பேசக்
கேள் நீ.

இதத்தையிவ் வுலகுக் கீய்வா ளிக்காவே ரியினு
னத்தால், வதத்தைச்செய் திடும்வே தாள வடிவறு
மென்று ரைத்து, முகத்தையீய்ந் திடுங்கா வேரி மூழ்கு
வித் தொழித்துப் பாவம், இதத்தைப்பார்த் திருக்கு
மையர் மிதிலையை நோக்கிச் சென்றார்.

நறக்கம லங்கள் பூத்த நற்காவே ரியினு னத்தால்
மறக்கவலையும் வேதாள வடிவு நீங்கிப் பின்னச்சம்
பிறக்கமுற் றந்த ணாளப் பிறப்புற்று டிக்கா வேரி
துறக்கனு டடைந்து போக போக்கியந் துய்த்தா
[னன்றே.''

## கங்கையில் காவிரியதிகம் என்றது

கங்கை, யமுனை, சரஸ்வதி, துங்கபத்திரை, கிருட்டினை, சரையு, கௌமதி, சிந்து ஆகிய நதிகள் உலாவிக் கொண்டிருந்தார்கள். அவ்வமயம் நாரதர் அவ்விடம் வந்தார். காவிரியன்னை வந்தவுடன் நாரதர் வந்தனம் வந்தனம் என்று வணங்கினர். காவிரி நாரதரை நோக்கி வந்தனைக்குக் காரணம் என்னையோ என்று வினவிற்று.

நாரதர் உங்களுள் யார் சிறந்தவர்கள் ? என்று வினவ, அவைகள் தாம்தாம் உயர்ந்தன என்று கூறத் தொடங்கின. கங்கை, காசி முதலிய சிறந்த தலங்கள் என்னுளடங்கியிருப்பதால் நானே உயர்ந்தவளாவேன் என்று கூறிற்று. காவிரியோ தன்பால் சிவ விஷ்ணு தலங்கள் பல நிறைந்திருப்பதால் நானே உயர்ந்தவள் என்று கூறிற்று.

காவிரிக்கரையில் உள்ள தலங்களாகச் சீரங்கம், கும்பகோணம், திருவையாறு, திருச்சிராப்பள்ளி, பாபநாசம், திருப்பழனம், கண்டியூர், திருக்கோடிகா, சுவாமிமலை, பட்டீசுரம், திருவிடைமருதூர், திருபுவனம், திருவெண்காடு, சீகாழி, மாயூரம், சாய்க்காடு முதலியவைகளைக் குறிப்பிடுகின்றார்.

பின், நாரதர் கூறியபடி அனைவரும் பிரமலோகம் அடைந்தார்கள்; கைகளைத் தலைமேல் குவித்துக் கொண்டு தங்கட்கு ஏற்பட்ட ஐயத்தைப் பிரமனிடம் கூறினார்கள்.

பிரமன், பொன்னிநதியின் சிறப்பை ஒருவராலும் கூறமுடியாது; அதில் நீராடுவோர் வேண்டிய வரம் பெறுவர்; மேலும், திருமால் நான் வேதங்கள் எவற்றாலும் ஆராய்ந்துகூற முடியாதது; இதனால் வேறு எவர்தாம் இதன் சிறப்பை அறிந்து கூறுபவர்கள் என்று கூறினான்.

## ஏகாதசிமகிமை உரைத்தது

அனவத்தியை துலாமாதத்தில் முறையான நியமங்களுடன் காவிரியில் நீராடி வந்தாள். சுமந்துமுனிவர், அனவத்தியைக்கு ஏகாதசி, துவாதசி இப்புண்ணிய நாட்களில் காவிரியில் நீராடுவதால் அடையும் பயனை ஒரு கதையின்மூலம் விளக்குகிறார்.

அனவத்தியை ஒரு சமயம் நீராடச்செல்லுகின்ற பொழுது கிரிப்பிள்ளையொன்று ஒரு பாம்பைப்பற்றித் துன்புறுத்துவதைக் கண்டாள். மனம் புண்பட்டுச் செய்வதறியாது நின்றாள். பாம்பு பரிசுத்தமான அனவத்தியையைக் கண்டவுடன் முன்னுணர்வுபெற்றது.

அவ்வுணர்வால் தான் முன்பு இந்திராணி என்றும், தன்னுடைய தவறிய காதலை அருச்சுனனிடம் கூறியது காரணமாக இந்திரன் என்னைப் பாம்பாகுமாறு சபித்தான்; அச்சாபம் உங்களைக் கண்டமாத்திரத்தில் நீங்கப்பெற்றேன்; இனி என்னுடைய வாழ்வு உங்களிடம் உளது என்றும் கூறிற்று. அனவத்தியையும் தன்னுடைய ஒரு ஏகாதசி விரதபலனை அதற்குக் கொடுத்தருளினுள். உடனே இந்திராணி சாபம் நீங்கி முன்னைய உருவைப் பெற்ருள். இவ்வளவும் காவிரியாடியதால் ஏற்பட்டபயனேயாகும் என்ருர்.

"இன்னிரை மதியி லேகா தெசியினு ளிச்சையோருந், தென்னிறை திரைக்கை யாலே சேர்த்தெடுத் தணைக டோறும், பொன்னிறைத் திடுங்கா வேரி புகுந்தாடிப் பூவின் மாதுத், தன்னிறை யான மாலை பூசித்துத் தானுண் ணுதே.

துன்னிருட் கங்குற் காலைத் துயிலாது விழித்திருந்து, பன்னிரு பக்க னுளிற் பாரணம் பண்ணச்செல்வம், மன்னிரும் பெருமை யார்ந்த வல்லப மடைந்து பின்னர், பொன்னிரு நிதிசேர் நாடும் அரிநாடும் பொருந்தி வாழ்வார்.

அத்தம ராசி தோன்றும் அற்பிசித் திங்கள் தன்னில்
சத்தமத் திதிபன் னென்று சறுவாபீட் டமும ளிக்கும்
வித்தமே வியதிப் பான்மை விளங்கிதி காச மேலே
உத்தம நிருப கேட்டி யுரைப்பன்முன் னெருகா லத்தில்.

காசிப் பதியிற் காலதன்மங் கண்ட யோகிக் காம் பலனும், விசித் தானங் காவிரியில் வீழ்ந்தா டினவர்க் காம்பயனும், மாசி லோரா யிரமேகா தெசினேன் பாலே வரு பயனும், மாசி லாத விதிபாத மயுதம் புரிய வரும் பேறும்.

துலைப்பன் றென்றின் வளம்ப டிப்போர் துணைக் காதுக்குட் பெய்தோர்கள், அலைக்கா வேரியிடையின்று ளாடினோர்க ளிவர்கள் பவம், தொலைத்துத் துக்க மேலாமெ ழிந்து துன்னியறமி யாவையுஞ் சுடரும், நிலைத்த பரமத் தானத்தி னேசத் தோடங் கினிதிருப் பார்.''

## காவிரிக்கரைத் தலச்சிறப்பு

ஐப்பசிமாதத்தில் துலாநீராடும் விசேட தலங்கள் இவை என்று கூறுகின்றார். சையமலை, ஸ்ரீநிவாசர் ஆலயம், இராமநாதம், விருபாட்சம், ஸ்ரீரங்கம், திருவானைக்காவல், திருவையாறு, சுவாமிமலை, கும்பகோணம், திருவிடைமருதூர், பசுபதிசுவரம், மாயூரம், சுவேதாரணியம்(திருவெண்காடு), சங்கமம் ஆகியவைகளாம். இவை யாவும் புண்ணியத்தைக் கொடுக்குந் தலங்களாம். இவைகளேயன்றித் திருவலஞ்சுழியையும் குறிப்பிட்டுள்ளார்.

"கையாறு கழியச் சூறை கரியரி முகரைக் காதி, மெய்யாற நடக்கு மாறு வேந்தற்கு முடிக வித்தல். செய்யாறு முகனைப் பெற்ற தேவியோர் பங்கன் வாழும், அய்யாற்றிற் பொன்னி யாட வளித்திடுஞ் சித்தி யாவும்.

புட்பவா ரணிய மேய புண்ணியப் புனிதன் முன்னர், தட்பவா சவம லிந்த தண்மலர்ப் பொன்னி மூழ்கில், துட்பவா தனைக டோர வாதனை களைய நூக் கிக், கொட்பவ ரறவ கண்ட சித்தியுங் கூடு மன்றே.

பலஞ்சுழி னலங்கள் காட்டிப் பரிகள்பாண் டியற் கீய்ந்தோனுர், வலஞ்சுழித் தலத்தைநாடி வந்தகாவேரி

யாடி, விலஞ்சுழி பவனுளக்க ரெனுமயற் பாரந் தாங் கர், மலஞ்சுழி யொழித்து முத்தி வைப்பினை யருளு மாதோ.

இடந்தைய லுளதென் றெண்ணரி யிலேகரி யாவ ரென்று, முடந்தையாய் மகிழ்ந்து பூசை யுளுற்றநல் லருள் பொருந்த, மடந்தையோர் பாகன் வாழும் வள மலிந் தாக்க மிக்க, குடந்தைசேர் பொன்னி யாற்றில் குடையக்கை வலங்கை கூடும்.

மடைமரு தப்பை கூழை வளர்த்திடக்களமராஞேர், நடைமரு தப்பாட் டோதி நாரியர் தாழ்ந்து கார்க்கு, மிடைமரு தடைந்த பொன்னி யாற்றினி லிறங்கி யாடி, யடைமரு தறத்தவிழ்ந்த வரியேத்து மரனைப் போற்றி.

முசுபலாப் பழத்தைப் பீறி முக்கித்தின் றகங்க ளிக் கும், பசுபதிச் சரம்படர்ந்த காவிரி பரிந்து மூழ்கில், வசுபட முதல ளிக்கில் மாபாத கத்தி லொன்ரு, யசுப மாம் பிரம கத்தி யாதியா வையு மறுக்கும்.

முத்தியும் வாய்க்கு முண்மை முகடவா னவர்களாலு, முத்தியா லறியொ ணுத வைபவ முறழ்ந்து செல்வஞ், சித்தியா னிற்கு மாயூ ரத்தினைத் தெரிசித் திட்டாற், புத்திமுத் திகளை யியும் புகன்றிடற் கரிய தம்மா.

பசு வசுந்தரை யெள்ளாடை பாளித மிரச தந் தான், வசுவவி யிலவணந் தானியமுதல் வழங்கிப் பின் னர், முசுவடைந் திடுமரக்கா மொய்த்திடு மாயூரத்தி, லசுவனு வனைத்தினுக்கு மதிபனுலையத் தடைந்தே.

சிசுத்தனை யாக்கள் செல்வந் தெருட்சியிச் செகத் தின் வாழ்வு, வசுத்தரைக் கற்ப மெண்கண் மலரயன் பதம் வைகுண்டம், மசுத்த தத்துவத்தி லுள்ள போக முத்திகள் மேலார்ந்த, சுசுத்த தத்துவ வாழ்வெல்லாம் துய்த்து முத்தியினிற் ருேய்வார்.

தூயா வனச்செஞ் சடையாய் சோயஞ்சோதியென்று
காயா வனமால் கசிந்தேத்தக் கருணைசெய்து
தாயாவன தந்தையுமாவன யாவுமானேன்
சாயாவனஞ் சார்நதியாடத் தருநல் முத்தி.

சாய்க்காடு வெண்கா டிரண்டுக்கு நற்சங்கமந்தான்
காய்க்கா டுகந்தாருக் கரைக்காவிரி யாடலாகு
நோய்க்கா டுனையா கிலராகிய நொன்மைச் சிய
மேய்காடு மைந்த ரிளமாதர்க ளிச்சை பூண்டே.''

இவைகளே அல்லாமல் இங்குக் குறிக்கப்படாத கோடானுகோடி தலங்கள் காவிரியின் இருமருங்கினும் உள்ளதாகக் குறிப்பிடுகின்றார்.

“உவப்புறுஞ் சய்யமாதி யுரவுநீர்க் கடலி ருகச், சிவப்புரு மணியலைக்குந் திரைப்பொன்னி கோடிரண்டிற், றவப்புது மைகடமைக்குந் தலங்கள் சாற்றின வல்லாமற், பவப்புன்மை யகற்று மீசன் பதிகொடா கோடியாகும்.''

காவிரியில் நீராடுவோர் மேற்கொள்ளாத நெறிகள் இவையிவை என்று குறிப்பிடுகின்றார்.

“சிவசத்தியாற் சிற்சத்தி திகழ்ந்தறு குணமணைந்து
துவசத்தார் சன்மார்க்கத்தை துலந்து பாழண்டராதல்
திவசத்திற் றிற்றியாதி சிவநியமத்த தன்றி
யவசமுற் றன்னியற்றி லாசைமென்மேல் விளைத்தல்.

சென்மாசாரஞ் சிரோட்டந் திகடவம் வருணாத்தன்ம
நன்மான நல்குவித்தை நாடுமாச் சிரமதன்மந்
தன்மாரா தனையொழித்தல் சத்துவ மில்லாதாரைக்
கொன்மாழ்கு முதியோர் தன்னைக் குறுகாத விடத்தில்
[கூடல்.

பதியரை யாசகாளைப் பொருந்துமப் பியாகதானை
மதியறு மரபடைந்து மதியினுற் பார்த்தல் மாண்பார்
பதியடைந் திருந்தகூவல் பாணியின் மூத்திரத்தை
வதியவிட் டிடல்துரும்பை மலர்க்கையால் கிள்ளல்
[மாதோ.

முகமயி ரொழித்தன்மூக்கிற் சளைசிந்த லோடுதீண்டல்
மிகமயல் செறிகீழோடும் விளம்பல்வெஞ் சமமுடன்றல்
நிகமசா ரஞ்சே ராத சாத்திர நிகழ்த்த தல்லாற்
சகமகிழ் சாமி மூன்று முதற்சத்தி கீழ்கா னிக்கல்.''

காவிரிநதியில் நீராடாதார் அடையும் பாவங்கள் இன்னவையென்று குறிப்பிடுகின்றுர்.

"பண்ணிய புண்ணியனை மிகப் பாவி யென்று பகர்ந்தவன் பாதகன் விரதபங்கஞ் செய்தோ, னெண்ணியமந் திரமறையோன் விருத்தர் பால ரெரிசூலி யவைகளையேற் றிடுவோர் மாண்பு, நண்ணியசான் றவருரைக்குந் தேவபாடை நவிலாமற் சிலகாலத் திடையே நல்குந். தண்ணியபா டையினுலே சாத்திரத் தைத் தாகமுறக் கேட்டோர்க ளிரயஞ் சார்வர்.

சரணமென விறைஞ்சுமைக்குங் கடலுண் டோர்க் குஞ் சம்புரைத்தா னவ னருளாற் சங்கத்தேறிக், கரண முகிர் கீரனுக்குங் கவுரியர்க்குங் கருதுசம தக்கினுக்குக் காதலோனுந், திரணதூ மாக்கினியே யாதியாகச் செப் பியபன் னிருதருக்குந் தெரிந்த திந்த. வரணமா கிய தமிழ்னு லல்லானுலா லரைந்தசாத் திரங்கேட்கி லள றுண் டாமால்.

காவிரியா டப்பெறுபே றெண்ணி ரண்டிற் கனிக் குமொரு பங்கருக மான தில்லை, காவிரியா[டலுக்கொத் ததருமம் பாரிற் கண்டதிலைக் கணமுமியா தொருவன்

சாக்காற், காவிரி னுளஞ் செய்யி லவன் கார்மேனிக் காலனைக் கண்ணுதலில்லை கடுகிவந்த, காவிரி னுனப் பலத்தாற் சுவற்க மேகிக் கவினரம்பை மாதரொடும் களித்து வாழ்வர்.

நந்தன ரதிக வாறு னல்லகற் படைந்த பாரி, செந்தனஞ் செல்வங் கீர்த்தி செவ்விய நடைந்த சீலந், தந்தமங் கலஞ்ச மழ்த்த தறங்காமஞ் சிரேட்ட புத்தி, வந்தன மிருங்கா வேரி வழங்குமெய் மன்னர் கோவே.

கற்றவ ரியாரு மெச்சுங் காவிரி மகிமை தன்னைச், சொற்றவா ருகந்து கேட்டுச் சுகவடி வாகிச் சுத்த, முற் றவன் றேவவன்ம னெருவனே யுவன்கொள் பேற்றை, முற்றனின் றிடுவனித்தை மொழிவர்கேட் டுகந்தோர் யாரும்.

வனந்தரும் பொன்னி மேன்மை வகுப்போனை மனத்திலென்று, மனந்தன்மா லென்றபுத்தி யகலாம லாசையோடு, தனந்தனைத் தானியத்தைத் தந்துபூ சித் தோர் முத்தர், நனந்தலை முத்தி வாய்ப்பர் நற்குணப் பேறு பெற்றே.

மாதம் மும்மாரி பெய்க வளந்தர மன்னன் வாழ்க, வேதவே திர்வை திக சைவமா னினமே லோங்கப், போதத்தீந் தமிழாற் கூறும் பொன்னிமா நதிப்பு ராணை, மோதவா ரிதிசூழ் வைப்பி லொளிதழைத் தோங்க மாதோ.

முற்றிற்று.